# செந்தமிழ்ச் செல்வி




சிலம்பு-௫௯ தி. வ. ஆண்டு-௨௦௧௫ கார்த்திகை பரல்-௪

நிசம்பர் 1984

---

# உள்ளுறை

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு-ருகூ          தி. வ. ஆண்டு உ0கரு, கார்த்திகை          பரல்-ச

திசம்பர் 1984

---

## பல்கலைக்கழகங்களில் சைவசித்தாந்தம்

எந்நாட்டவர்க்கும் இறைவனான சிவபெருமான் தென்னாடுடையவன் என்று போற்றப் பெறுகிறான். மேன்மைகொள் சைவநீதி நம் நாட்டில் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்னரே தோன்றிக் காலூன்றியுள்ளது. தொன்றுதொட்டு இருந்துவரும் சிவ வழிபாட்டிற்கு அடிப்படையானவை தோத்திர சாத்திர நூல்களாகும். பன்னிரு திருமுறைகளான தோத்திர நூல்களும் மெய்ப்பொருள் கூறும் பதினான்கு சாத்திர நூல்களும் இவற்றுக்கு முற்பட்ட ஆகம நூல்களும் நன்கு பயிலப் பெற வேண்டியவை.

சைவசித்தாந்தம் என்னும் தத்துவம் தமிழர்களிடையே ஈராயிரம் ஆண்டுகட்கு மேலாகப் பயிலப்பட்டுவரினும் அதற்கு ஆகம நூல்கள் நெறிமுறை வகுத்தன. இருப்பினும் பதினான்கு சாத்திர நூல்கள் தோன்றிய பின்னரே அத் தத்துவத்தின் முழு உருவம் வெளிப்பட்டது.

இப் பெருந் தத்துவத்தின் உண்மை இயல்புகளைச் சைவப் பெருமக்கள் மக்களிடையே பரப்பி வந்தனர். இருப்பினும் இந் நூல்களைக் கற்பாரும் ஆய்வாரும் மிக அருகியே காணப்படுகின்றனர்.

இதனையுணர்ந்தே சைவசித்தாந்த உண்மைகளைப் பரப்பவும், சித்தாந்த நூல்களைப் பயிற்றுவிக்கவும் அவற்றை மேன்மேலும் ஆயவும் பல்கலைக்கழகங்களில் தனித் துறைகள் தொடங்கியுள்ளமையைப் பாராட்டுகின்றோம்.

முத்த பல்கலைக்கழகமான சென்னைப் பல்கலைக்கழகம் தன் தத்துவத் துறையின் வழி சைவசித்தாந்தத்தை ஓரளவு பயிற்றுவித்து வந்தது. பேராசிரியர் சூரிய நாராயண சாஸ்திரி, டாக்டர் வி. ஏ. தேவசேனாபதி போன்றோர் அரிய கட்டுரைகளையும் நூல்களையும் சைவசித்தாந்தத்தை ஆய்வு செய்து எழுதினர். அண்ணாமலை, மதுரைப் பல்கலைக்கழகங்களும் ஓரளவு தொண்டாற்றின. மதுரைப் பல்கலைக்கழகம் இத் துறைக்கெனத் தனிப் பேராசிரியரை அமைத்தது.

தமிழ்மொழி, தமிழ் இனம் இவற்றுக்காகப் பாடுபட்டுவரும் தமிழ்ப் பல்கலைக்கழகம் தத்துவமையம் ஒன்றைக் காஞ்சியில் தொடங்கியுள்ளது. அதில் சைவசித்தாந்தத்திற்குத் தனித்துறை அமைக்கப்பெற்றுள்ளது.

சென்ற ஆண்டு நடைபெற்ற சென்னைப் பல்கலைக்கழக 125 ஆவது ஆண்டு விழாவையொட்டி அதில் சைவசித்தாந்தத்திற்குத் தனித்துறையே முதன் முதலாக நிறுவப்பட்டது. சைவப் பெருமக்கள் பெரு முயற்சியுடன் ரூ. இருபத்தைந்து நூறாயிரம் தொகுத்து இத் துறையை நிறுவினர். அதன் பின்னர் பாரதிதாசன் பல்கலைக் கழகத்துடன் இணைப்புபெற்ற 'சைவசித்தாந்த உயர் ஆய்வு மையத்தை'த் தவப்பெருந்திரு தருமையாதீன மகா சன்னிதானம் அவர்கள் தருமையாதீனத்தின் சார்பில் அண்மையில் தொடங்கியுள்ளனர். காசியிலுள்ள வாரணாசி இந்து பல்கலைக்கழகம் நாற்பது ஆண்டுகளுக்கு முன்னரே சைவசித்தாந்தம் பயிற்றுவிக்க விரிவுரையாளர் ஒருவரை அமர்த்திற்று. அங்கு, திருப்பனந்தாள் காசி மடத்தின் பொருள் கொடை கொண்டு அரிய சொற்பொழிவுகள் ஆண்டுதோறும் பேரறிஞர்களைக் கொண்டு நிகழ்த்தப்பெற்று வருகின்றன.

சைவசித்தாந்தம்பற்றி எண்ணுவார் இல்லாத நிலை மாறி எல்லாப் பல்கலைக்கழகங்களிலும் இது தனித்துறையாகவோ அல்லது சிறப்புப் பாடமாகப் பயிற்றுவிக்கும் நிலையோ ஏற்பட்டிருப்பது கண்டு பெரு மகிழ்ச்சியடைகிறோம்.

இருப்பினும் அதனை ஏற்று நடத்தும் பொறுப்பை ஏற்கத்தக்க அறிஞர்கள் போதிய அளவு இல்லாமை ஒரு பெருங்குறையேயாகும்.

அடுத்து, இப் பல்கலைக்கழகங்கள் இணைந்து சைவசித்தாந்தத்தைச் சிறப்பாகப் பயிற்றுவிக்கத் திட்டங்களை வகுக்க வேண்டும். மறைந்த பேரறிஞர் அண்ணா அவர்கள் தமிழின்மீது தமக்கிருந்த தணியாத ஆர்வத்தால் உலகத் தமிழ் மாநாட்டைச் சென்னையில் சிறப்புற நடத்தினார். அதன் நினைவாக ரூ. ஒன்பது நூறாயிரத்தை

மூன்று (சென்னை, அண்ணாமலை, மதுரை) பல்கலைக்கழகங்களுக்கும் சமமாகப் பகிர்ந்தளித்துத் திருக்குறள் துறைகளை அமைத்தார். மிகத் துடிப்புடன் செயல்படத் தொடங்கிய அத் துறைகள் இன்று தன்னடக்கத்துடன் செயல்பட்டு வருகின்றன! இதைக் கருத்திற் கொண்டு சைவசித்தாந்தத்தைப் பரப்ப முன்வந்துள்ள பல்கலைக் கழகங்களும் தொடக்கத்தில் மட்டுமன்றித் தொடர்ந்தும் துவளாது செயலாற்ற வேண்டும். இவை ஒருங்கிணைந்து தனித்தனி முறையில் செயல்முறைத் திட்டங்கள் வகுத்துச் செயல்படவேண்டும்.

சைவசித்தாந்தத்தைப்பற்றி யாரும் கவலைப்படாத நிலையில் சென்ற நூற்றுண்டின் இறுதியில் அதன் உண்மைகளைப் பரப்புதற்கு 'Siddhanta Dipika' என்ற அரிய ஆங்கில இதழை நீதித் துறையில் பணியாற்றிவந்த ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை நடத்திஞர். ஏறத்தாழ 14 ஆண்டுகள் மிக நல்ல முறையில் இது நடத்தப் பெற்றது. 'சித்தாந்த தீபிகை' என்ற பெயரில் மறைத்திரு மறைமலையடிகளார் தாமே ஆசிரியராயிருந்து தமிழிலும் இதழை நடத்திஞர். எனினும் ஓராண்டில் அது நிறுத்தப்பெற்றது. ஆங்கில இதழில் சைவசித்தாந்தத்தை விளக்கும் மிக அரிய கட்டுரைகள் வெளிவந்துள்ளன. அத் தொகுதிகள் சைவசித்தாந்தத்தின் ஆய்வுக் கருவூலமாகும். அதன்வழி ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை சில சாத்திர நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

இத்தகைய பணிகள் பல்கலைக்கழகங்களின்வழி தொடரப்பட வேண்டும். பதினன்கு சாத்திரங்கள், அவற்றிற்கு முன்னும் பின்னுமெழுந்த சைவசித்தாந்த நூல்களுக்கு நல்ல ஆய்வுரைகள் வெளிவரவேண்டும். 'சித்தியார் அறுவர் உரை' போன்ற நூல்கள் வெளிவர முயற்சிகள் மேற்கொள்ளப்பெற வேண்டும். ஆங்கில மொழிபெயர்ப்புகள் உருவாக வேண்டும்.

சைவ சமயத்தின் அடிப்படை உண்மைகள் பொதிந்து கிடக்கும் ஆகம நூல்கள் இன்று தமிழர்க்கு எட்டாக் கனியாகவே இருந்து வருகின்றன. மூல நூல்கள் அனைத்தும் கிரந்த எழுத்துகளால் ஓலைச் சுவடிகளில் எழுதப்பெற்றுள்ளன. வடமொழியை எழுதுவதற்காகத் தமிழர்களே கண்டுபிடித்து உருவாக்கியது கிரந்த வரி வடிவம். ஆனல் இன்று கிரந்தம் பயிலத் தெரிந்தோர் மிகமிகக் குறைவு. அதன் விளைவாக ஆகம நூல்களைத் தமிழர் நேரடியாகப் பயில இயலாது போயிற்று.

இந் நிலையில் கொ. சண்முகசுந்தர முதலியார் காமிகம், மிருகேந்திரம், பௌட்கரம், காரணுகமம், குமாரதந்திரம்

முதலிய ஆகமங்களை வெளியிட்டு ஆகமப் பதிப்புப் பணியைத் தொடங்கினுர். இவருடைய உறவினரான எம். அழகப்ப முதலியார் ஒரு சில ஆகம, துணை ஆகம நூல்களைப் பதிப்பித்தார். இவர்கள் சிறு அளவிலேயே இதைச் செய்தனர்.

வள்ளன்மை மிக்க செட்டி நாட்டுப் பெருமக்கள் தமிழகத்துப் பழம் பெருங் கோயில்களைப் புதுப்பிக்கத் திருப்பணிகள் செய்தது போல் சைவ ஆகமங்களைப் புதுப்பிக்கும் திருப்பணியை மேற் கொண்டு தேவ கோட்டையில் சிவாகம பரிபால்ன சங்கத்தைத் தொடங்கினர்.

ஆகமத்தில் தோய்ந்த பல அறிஞர்களை ஈடுபடுத்திக் கிரணம், மிருகேந்திரம், மதங்கபரமேசுவரம் போன்ற ஆகமங்களை இச் சபையினர் வெளியிட்டனர்,

புதுவையிலுள்ள பிரெஞ்சு இந்திய ஆய்வுக் கழகம் ஆகமங்களை நாகரி எழுத்துகளிலும் பிரெஞ்சு மொழியில் பெயர்த்த மொழி பெயர்ப்புடனும் வெளியிடத் தொடங்கியது. ரௌரவம், அஜிதம், மிருகேந்திரம் முதலிய ஆகமங்களை மிக அழகிய முறையில் வெளியிட்டுள்ளது. கொள்கை காரணமாக ஆங்கில மொழி பெயர்ப்பை இக் கழகத்தால் தர முடியவில்லை.

தென்னிந்திய அர்ச்சகர் சங்கம் தற்போது ஒரு சில ஆகமங்களை வெளியிட்டுள்ளது. தமிழ்மொழி பெயர்ப்பு இல்லை.

இவ்வாறு பல முயற்சிகள் நடத்தியும் தமிழாக்கங்கள் வெளிவராமை பெருங்குறையே. இக் குறையைப் போக்கப் பல்கலைக் கழகங்கள் முயல வேண்டும்,

இப் பணியில் அனைத்துப் பல்கலைக்கழகங்களுக்குமிடையே ஓர் ஒருமைப்பாடு தேவை. அவ்வப்போது சிறந்த சைவசித்தாந்த நூல்கள் இப் பல்கலைக்கழகங்கள்வழி வெளிவருமாயின் தமிழகத்தில் மட்டுமன்றி உலகெங்கும் தமிழரின் சமய உண்மை பரவ் ஏதுவாகும். இதற்குப் பல்கலைக்கழகங்கள், இதுகாறும் போதிய பணியாற்ருவிடினும் இனியேனும் ஆவன செய்யுமென்று நம்புகிறேம்.

வாழ்க சைவசித்தாந்தம் !

———

# "பர்" என்னும் வேர்ச்சொல்

[கழக இலக்கியச் செம்மல்,
புலவர் இரா. இளங்குமரன்]

(முன் இதழ் ௧௧௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

பரவுதல் அல்லது விரிதல் பொருளிலே வருவதே 'பரத்தன்' என்பது. தன்னுரிமை அல்லாளைத் துய்க்க விரும்புவன் பரத்தன். 'பரத்தை' என்பது பரத்தன் என்பதன் பெண்பால். உரிமையிடங் கடந்து ஓடி விரியும் தன்மையால் இப் பெயர்கள் வந்தன.

பரத்தை என்பது பெருவழக்காகக் கேட்கப்படுவதுபோலப் பரத்தன் என்னும் வழக்கு கேட்கப்படுவது இல்லை. ஆனால், இரு பாலுக்கும் பொதுமையறம் சுட்டவந்த வள்ளுவர் 'பரத்த' என்னும் விளிவடிவில் பரத்தனை வழங்கியுள்ளார்.

"நண்ணேன் பரத்த நின் மார்பு"

என்பது அது (1311).

"பகலாண் டல்கினை பரத்த"

என்னும் ஆட்சி கலித்தொகையில் இடம் பெற்றுள்ளது.

பரத்த என்பது, "பரத்தமைத் தன்மையுடையவனே" என விளியாகவே இவ் வீரிடங்களிலும் நின்றன.

'பரத்தர்' என்னும் பலர்பால் ஆட்சியைச் சிலம்பும், 'பரத்தமை' என்னும் தன்மையை நற்றிணையும் சுட்டுகின்றன.

"நகரப் பரத்தரொடு திரிதரும்"

என்பது சிலம்பு (5 : 200).

"தண்டுறை யூரன் தண்டாப் பரத்தமை"

என்பது நற்றிணை (280).

'பரத்தல்' என்பது பரவுதலையும், பரத்துதலாம் செயலையும் குறிக்கும்.

மேய்ச்சல் புலத்தில் ஏறுகள் பரவிச் செல்லுதலை 'ஏறுபரத்தர' என்னும் கலி (106).

வெள்ளம் மிகுந்து பரவிச் செல்லுதலை,

"மலிபுனல் பரத்தந் தாங்கு"

என்னும் நற்றிணை (230).

நெய்தல் நில மக்களைப் 'பரதவர்', 'பரதர்' என்பது பண்டை வழக்கு. இந்நாளில் 'பரவர்' என்னும் வழக்கு பரதவர் என்பதன் தொகுத்தலேயாம். மீன் பிடித்தலைப் பெருந்தொழிலாகக் கொண்டுள்ள கடல்நில மக்கள் 'மீன் பரவர்' என்றும், 'மீன்விலைப் பரதவர்' என்றும் வழங்கப்படுதல் நோக்கத் தக்கனவாம்.

'பரவை' என்பது பரந்துபட்டுள்ள கடலைக் குறிக்கும். அப் பரவையை ஆண்டு தொழில் படுத்துநரும், அப் பரவையை அடுத்தே குடியிருப்புக் கொண்டுறைநரும் ஆகிய பண்டைத் தமிழ்மக்கள் அக் காரணியம் கருதிப் 'பரதவர்' எனப்பட்டனர்.

"மணிப்பூ முண்டகத்து மணன்மலி கானல்
பரதவர் மகளிர் குரவையொ"

டொலித்தலை மதுரைக் காஞ்சி பாடுகின்றது (96-7)

"கொடுந்திமிற் பரதவர் குரூஉச் சுடர்"

எண்ணுதலைப் பட்டினப்பாலை பாடுகின்றது (112).

கடல்வளப் பெருக்குடையவனும் கனவிலை முத்தால் உலகு புகழ் பெருமை வாய்ந்தவனுமாகிய பாண்டியன்,

"தென் பரதவர் போர்ஏறு"

எனப் புகலப்படுகின்றான் (மதுரைக். 144).

வைத்த ஒரு பார்வையால் பார்க்க முடியாத அளவு பரவிக் கிடக்கும் நீர்ப் பரப்பைப் 'பரவை' என்று பெயரிட்டது போலவே 'கடல்' என்னும் ஒரு பெயரும் முந்தையோர் இட்டனர். கண்ணின் பார்வை எல்லையைக் கடந்தது என்னும் பொருட்டதே கடல் என்பதாம். இதனை ஒப்பு நோக்கிக் காணின் பொருள் விளக்கம் மேலும் சிறக்குமாம்.

பரதவர் மலிந்த பயங்கெழு நிலமாக இருந்ததால் "குமரியொடு வடவிமயத்து ஒரு மொழி வைத்து உலகாண்ட" தமிழ வேந்தர் நாளையிலே நாவலந் தேயம் முழுதுறச் சுட்ட 'பரதம்' என்னும் பெயர் வழங்கப்பெற்றதெனக் கருதலாம்.

அரசரைப் போலவே வணிகரும் வளம் பெற்றிருந்தனர் என்பதால் வணிகரை 'இளங்கோக்கள்' என்றனர். அரச குமரரும் பரத

குமரரும் ஒருங்குடன் செல்வதைச் சிலம்பு கூறும் (5 : 158). இவண் வரும் பரத குமரர், திரைகடலோடித் திருவளம் தேடிய வணிக குமரராவர்.

'பரதர்' ஆவார் 'பரதவர்'. இதனைப் 'பரதர் மலிந்த' என்பதற்குப் 'பரதவர் மிக்க' என நச்சினார்க்கினியர் வரையும் உரையால் அறியலாம் (பெரும்பாண். 323).

பரதவர்க்கு இருந்த செல்வாக்கு,

''பாற்கேழ்,
வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉம்
நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை
மாட மோங்கிய மணன்மலி மறுகிற்
பரதர் மலிந்த பல்வேறு தெரு''

என்பதால் புலப்படும். (பெரும்பாண். 319-323).

இனிப் பரதன் என்னும் பெயர் பரவையாம் கடலாட்சி கொண்ட வணிகர்க்கு இருந்தது என்பதைச் சிலம்பும் மேகலையும் தெளிவிக்கும்.

''வெந்திறல் வேந்தற்குக் கோத்தொழில் செய்வோன்
பரதன் என்னும் பெயரன்''

என்பது சிலம்பு (23 : 153-4).

''பார்த்திபன் தொழில் செயும் பரதன்''

என்பது மேகலை (26 : 25).

பரதம் நாட்டுக்கு ஆதலை,

''பாடல்சால் சிறப்பில் பரதம்''

என ஒரு முறைக்கு இரு முறை சுட்டும் மணிமேகலை (பதி. 20 : 18 : 57).

எல்லை கடந்து செல்வது புகழ் ஆகும். இதனை ''மண்டேய்த்த புகழ்'' என்னும் சிலம்பு (1 : 36). இத் தொடர்க்குப், ''பூமி சிறுகும் படி வளர்ந்த புகழ்'' என்பார் அரும்பதவுரையாசிரியர். ''மண்ணைத் தொலைத்த புகழ்'' என்பார் அடியார்க்கு நல்லார்.

ஓங்கிப் பரவிய புகழாளர் ''பரந்தவர்'' எனப்படுவர். ''பரந்தோர் எல்லாம் புகழ்'' என்பது புறப்பாடல் (285). ''பரந்தவர் கொள்கை''யைப் பகரும் பழமொழி நானூறு (399). பலர் பாராட்டுக்கும் பரசுதலுக்கும் பரவுதலுக்கும் உரிய புகழாளர்களைப் பரந்தோர் என்பது பொருள்நலம் பொருந்தியதாம். (தொடரும்)

———

# பதிற்றுப்பத்தில் விடத்தேர்

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

பதிற்றுப்பத்து 13ஆம் பாட்டில் ''திரிகாய் விடத்தரொடு காருடை போகி'' என்ற வரி வருகின்றது. இதற்கு எழுதிய குறிப்புரையில் உ. வே. சாமிநாதய்யர் 'திரிந்த காயையுடைய விடத்தேரை யென்னும் முள்மரத்தோடு கரிய உடை மரமும் வளரப்பெற்று; விடத்தர், உடை; முள் மர வகைகள். விடத்தர் என்பது விடத்தேர்; விடத்தேரை, விடத்தே தொடர எனவும் வழங்கும் (பெரும்பாணாற்றுப் படை 184-5; நற்றிணை குறிப்புரை) என்று எழுதியுள்ளார். ''முள்ளுடுத் தெழுகாடோங்கிய தொழுவுடைய வரைப்பிற்'' என்ற பெரும்பாணாற்றுப்படை வரிக்கு நச்சினார்க்கினியர் 'முள்ளுத் தன்னிடத்தே சூழ்ந்து எழுகின்ற விடத்தே தொடரி முதலிய காடுகள் சூழ்வளர்ந்த தொழுக்களையுடைய ஊர்களில்' என்று உரை கூறியுள்ளார். இதற்கு அடிக்குறிப்பாக உ. வே. சாமிநாதய்யர் 'விடத்தே தொடரி'—ஒரு வகை முள்மரம்; விடத்தர், விடத்தேரையென இம் முள் மரம் வழங்கும், ''திரிகாய் விடத்தரொடு'' (பதிற்றுப்பத்து 13: 14); ''தள்ளா விடத்தேர்'' (தண்டி. மேற்); ''விடத்தேரை மற்றும் வனம்'' ''திருவரங்கத்தந்தாதி'': 931 என்று எழுதியுள்ளார்.

விடத்தேர் என்று சங்க நூல்களில் பதிற்றுப்பத்தில் மட்டும் வரும் இந்த மரம் இன்று 'விடத்தலை' என்று வழங்குகின்றது. விடத்தாரி என்றும் அழைக்கப்படும். ஆனால் நச்சினார்க்கினியர் கூறிய விடத்தே தொடரி என்ற பெயரில் தொடரி என்பது வேறு ஒரு தனிமரம் என்று தெரிகின்றது. ஊர்மன்றத்திலே விடத்தலை குச்சியை நட்டு சத்தியம் செய்யச் சொல்லி மறுநொடியில் துளிர் விட்டுத் தளிர்த்தால் உண்மை என்ற நம்பிக்கை நிலவுகின்றது. இந்த விடத்தேர் என்ற மரம் பாலைப் பிரிவுக்கான வறட்சியான இடங்களில் வளரும் என்று அறிவியலார் கூறுவர். ஆதலின் இது நட்டவுடன் துளிர்த்ததால் சத்தியம் செய்தது உண்மையென்று கருதினர். இந்த மரம் வறட்சியான இடங்களில் வளரும் என்று அறிவியலார் கூறுவர். காடுகளிலும் கற்பாங்கான இடத்திலும் வளர்வதாகவும் கிளைகளில் முட்களையுடையதாகவும் (grows in dry forests and on stony hills, shrub or small tree with strong branches) கூறுவர். இதன் காய் முறுக்கிட்டுக் காணப்படும் (Twisted Pods என்றும் இதன் காய் வர்ணிக்கப்பட்டுள்ளது. பதிற்றுப்பத்தில் திரிகாய் விடத்தர் என்று கூறியுள்ளது. இந்த மரத்தை Dichrostachys Cinerea என்று அறிவியலில் அழைப்பர். இதன் வட

மொழிப் பெயர்களாகவரும் வெல்லாந்தரா Vellantara, Viravriksha, Virataru ஆகியவை தமிழ்ப் பெயரின் அடிப்படையாகத் தோன்றியவையாகத் தெரிகின்றன.

தமிழில் விடத்தால்லா, விடதரரா, விடத்தரலேர் என்றும் மலையாளத்தில் விடத்தாள் என்றும் அழைக்கப்படும். கன்னடத்தில் Wadu என்றும் தெலுங்கில் Vetturu என்றும் இந்தியில் Vurtuli என்றும் அழைக்கப்படும்.

---

## தேரையார்

தமிழகத்தில் 'போகர்' காலத்தில் அவருடைய மாணுக்கர்களில் ஒருவர்—நரம்பியல்—மூளை மருத்துவத்தில் சிறந்து விளங்கியதாகச் செவிவழி வரலாறு ஒன்று உண்டு.

தலைவலியால் துன்புற்ற ஒருவர் பண்டுவத்துக்காக போகரிடம் வருகிருர். போகர் அவரைத் தம் மாணவரிடம் அனுப்பி வைக்கிருர்.

மாணவர் வந்த நோயாளியின் மண்டை யோட்டுக்குள்—மூளைப் பகுதியில் வேறு ஓர் உயிர் இருப்பதை அறிகிருர். குருநாதர் போகரிடம் நிலைமையைக் கூறி 'அறுவைப்பண்டுவம்' செய்ய வேண்டியிருப்பதைச் சொல்லி—இசைவு பெற்றுச் செயல்படுகிருர்.

மண்டையோட்டை அறுவை மருத்துவம் மூலம் அகற்றியதும் மூளைப் பகுதியில் ஒரு தேரை உயிருடனிருப்பதைக் காணமுடிகிறது. தேரையைக் கருவியாலோ—கைகளாலோ அகற்ற முயன்ருல் மூளைப் பகுதியைப் பெயர்த்துக்கொண்டுதான் தேரை விழும். அதனுல் பண்டுவம் பயனின்றி நோய்வாய்ப்பட்டவர் இறக்க நேரிடும்.

தமது சீரிய சிந்தனையால் தேரையை அப்புறப்படுத்த ஒரு செயல் திட்டத்தை அவர் செயலாக்கினுர். தேரைக்கு இளநீரின் நீர்மீது அளவு கடந்த பற்று உண்டு. அதனுல் ஓர் இளநீரைக் கொண்டு வந்து சீவி இளநீரின் மணம் தேரைக்குக் கிட்டும்வகையில் உயர்த்தி இளநீரைக் காட்டினுர். தேரை உடனே இளநீர்மீது தாவியது. மூளையில் நோய் தந்துகொண்டிருந்த தேரை அகன்றது. நோயாளியின் மண்டையோடு மறுபடி பொருத்தப்பட்டு நலமடைந்தான்.

அன்றுமுதல் போகர் மாணவர்களில் ஒருவரான இவருடைய இயற்பெயர் மறைந்து போயிற்று. 'தேரையார்' என்ற செயல் பெயரே நிலைத்து நின்றது. இது காலகாலமாகக் கூறப்படும் செய்தி.

இதே நுட்ப பண்டுவத்தை இன்று நாமெல்லாம் காணவும்—பயன்பெறவும் செயல்படுபவர் நம் பண்டுவர் பி. இராமமூர்த்தி அவர்கள்.

அறுவைப்பண்டுவ முறையைத் தொலைக்காட்சி மூலம் நாம் கண்டிடச் செய்து காட்டுபவர்—நம் காலத்தில் வாழும் 'தேரையார்' தன்வந்திரி இராமமூர்த்தி அவர்கள்.

மீ. சு. இளமுருகு பொற்செல்வி

நிறுவனர், குழித்தலை தமிழ்க் 'காசு' இலக்கியக் குழு.

# பாவாணர் பாதையில்....

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

(முன் இதழ் ௩௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

அகராதியை அகரமுதலி என்றது ஏன்?

1. பாவாணர் அகராதிக்கு அகரமுதலி எனப் பெயரிட்டார். ஆதி வடசொல்லாதலின் தூய தென் சொல்லான முதலி என்பதை எடுத்தாண்டார். தொல்காப்பியத்தில் முதல எனப் பொருள்படும் 26 இடங்களில், 25 இடங்களில் முதல என்னும் சொல்லையும் ஒரே இடத்தில் ஆதி (தொல். செய். 35) என்னும் சொல்லையும் தொல்காப்பியர் ஆண்டிருக்கிறார். அதுவும் பாடவேறுபாடாகக் காட்டிப் புகுத்திய இடைச் செருகலாதல் வேண்டும். இகரவீற்றுப் புணர்ச்சியை உயிர் மயங்கியலில் விதந்துரைத்த தொல்காப்பியர்,

> "இகர விறுதிப் பெயர்நிலை முன்னர்
> வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே"

எனவும்,

> "பதக்குமுன் வரினே தூணிக் கிளவி
> முதற்கிளந் தெடுத்த வேற்றுமை யியற்றே"

எனவும் வேற்றுமையிலும் அல்வழியிலும் இகர இறுதி மிக்கு முடியும் என்றார். உரி, நாழி, பனி, இனி, அணி, வளி, புளி, உதி என இத் தொடக்கத்து இகர வீற்றுச் சொற்களையெல்லாம் தனித்தனி விதந்துரைத்த தொல்காப்பியர் ஆதி தமிழ்ச் சொல்லாயின் அதன் புணர்ச்சிக்கும் நூற்பா யாத்திருப்பார். அது இயல்பாகும் இடத்தையும் சுட்டியிருப்பார்.

பழந்தமிழ்ச் சான்றோர் அனைவரும் முதலிய, முதல என்னும் பொருளில் ஆதி என்னுஞ் சொல்லைப் பெரிதும் ஆளவில்லை. தமிழிலக்கியங்களில் பெருமளவுக்கு ஆட்சி பெறாததால் அதனைத் தூய தென்சொல்லாகப் பாவாணர் ஏற்றுக் கொள்ளவில்லை.

2. ஆதி என்னுஞ்சொல், முதன்மை என்று பொருள்படும் சிந்துவெளித் தமிழின் வழிவந்த வடநாட்டுச் சொல். அதன் வேர் முன் வருதல் கருதிய அகு—ஆ என்னும் வினைமுதலே. இந்தியில் ஆகே என்பது முன்னால் என்று பொருள்படும். மராட்டிய மொழி

யில் அகுதலி என்பது தலைவாழை இலையைக் குறிக்கும். பழங் கன்னடத்தில் ஆதலே என்பது முன்வரிசை என்று பொருள்படும். தெலுங்கில் ஆதிகொனு—முற்படு எனப் பொருள்படும். ஆ என்னும் (சேய்மை) சுட்டுச் சொல்லுக்கும், தளிர்த்தல், முன்வரல், மேம்படல், ஆகுதல் எனப் பொருள்படும் அகு—ஆ என்னும் வினைச்சொல்லுக் கும் எவ்வகைத் தொடர்புமில்லை.

3 ஆ சேய்மைச் சுட்டெனின் அ—ஆகு எனத் திரியுமே யன்றி ஆதி எனத் திரியாது. தெலுங்கில் அது—அதி எனத் திரியினும் தமிழ் மரபுக்கு ஏற்றதன்று. முன்மை சுட்டிய முன்னொட் டாகவும் 'ஆ' தமிழில் ஆளப்படவில்லை. ஆ என்னும் முன்மை சுட்டிய சுட்டுச் சொல்லடியாக ஆதி தோன்றி, முந்தைய எனப் பொருள்பட்டதெனின் அண்மை சுட்டிய ஈ என்னும் சுட்டுச் சொல் லடியாக ஈதி என்னும் சொல் தோன்றி, பிந்திய எனப் பொருள் பட்டிருத்தல் வேண்டுமன்றோ ?

4. இதுபோன்றே, தந்தையைக் குறிக்கும் அத்தன் என்னும் சொல் ஆதன் எனத் திரிந்து தலைவனையும் குறிக்கும். சேர மன்னர் களின் பெயர்களில் ஆதனழிசி, ஆதன் ஓரி எனவும் சேரலாதன், வாழியாதன் எனவும் இயற்பெயர்களாகவும், சிறப்புப் பெயர்களாக வும் இச் சொல் வழங்கி வந்திருக்கிறது. குடகு மொழியில் ஆத என்னும் சொல் தலைவன் எனப் பொருள்படுகிறது. தலைவன் எனப் பொருள்படும் ஆதன் என்னுஞ் சொல் ஆதி எனத் திரிந்து தலைவி எனப் பொருள்படும். கரிகாற் சோழனின் மகள் பெயரிலுள்ள (ஆதிமந்தி) முதற்பெயர் ஆதி—தலைவி எனப் பொருள்படும். மந்தி—இளவரசி, ஆதிமந்தி—தலைமையான இளவரசி அல்லது மூத்த இளவரசி. ஆதி என்னும் பெண்பாற் சொல் பெயரெச்ச மாகவோ இயற்பெயரல்லாத கூட்டுச் சொல்லின் முன்பின் உறுப்பு களாகவோ வழங்கியதற்கான சான்றில்லை. ஆதி பகவன் என்னும் சொற்றொடரில், ஆதி தலைவி எனப் பொருள்படுவதாயின், அச் சொற்றொடர் அழகரடிகளின் கருத்தின் வண்ணம் அம்மையப்பனாகிய சிவபெருமானையே குறிக்கும். ஆதலின் தலைமை சுட்டிய ஆதி என்னும் பெண்பாற் சொல் பொதுச் சொல்லாயிற்று என்பதை ஏற்க வியலாது. வருதி, போதி என்றாற்போல், ஆதி என்பது ஏவல் வினையாகப் பொருள்படுமேயன்றி வேறு வகையாகத் தமிழில் பொருள்படுமாறில்லை.

5. இனி, மிகுதி—மீதி, பகுதி—பாதி எனத் திரிந்தது போன்று அகுதி—ஆதி எனத் திரிந்ததாகக் கொள்ள இடமுண்டு. அகுதி என்னும் சொல் முன்வந்தது, முதன்மையானது எனப் பொருள்படும். அகு—அகுதி—முன்னாலிருப்பது, மேலே இருப்பது,

முதலாவது, அகுதி, அகுதை என இயற்பெயர் கொண்டவர்களும் பழந்தமிழகத்தில் வாழ்ந்திருக்கின்றனர். இந்த அகுதி பெண்பாற் சுட்டியதன்று. முதன்மை மட்டும் சுட்டியது. அகு என்னும் வினைச்சொல் அகலெ (அடுத்து முதலாக வருவது) என இந்தியில் திரிந்து. இனியடுத்த முதன்மையது எனப் பொருள்படுதலை ஒப்பிட்டு நோக்குக. எனவே, அகுதி—ஆதி எனத் திரிந்து முதன்மை சுட்டிய் சொல்லாக வடநாட்டு மொழிகளில் வழங்கிப் பிறகு வடமொழியிலும் பெருக ஆட்சி பெற்றிருக்கிறது என அறியலாம். மிகு என்னும் வினையும் மிகுதி என்னும் பெயரும் தமிழில் பண்டுதொட்டு ஆட்சி பெற்றிருப்பதுபோல் அகு என்னும் வினையும், அகுதி என்னும் பெயரும் தூய தென்சொற்களாயினும் தமிழில் பெருகிய ஆட்சி பெறவில்லை. ஆதலின், அதன் திரிபான ஆதி என்னும் சொல்லைத் தமிழில் தோன்றி வளர்ந்த தனித்தமிழ்ச் சொல்லாகக் கொள்ள இயலாது. மிகுதி என்பதை நோக்க மீதி என்பது கொச்சை வடிவமே: செந்தமிழ் வடிவமன்று. ஆதி என்பது வடநாட்டில் தோன்றி வளர்ந்து பெற்ற வடிவத்தைத் தமிழ்நாட்டிலேயே தோன்றி வளர்ந்து பெற்றிருப்பினும் அதனைக் கொச்சை வடிவம் என்பதல்லது செந்தமிழ் வடிவம் எனக் கொள்ளலாகாது.

6. இனி, சூராதி சூரன், தேவாதி தேவன் என்னும் தொடர்களில் ஆதி என்னுஞ் சொல் (அதி—மிகுதி) சூரன்+அதி+சூரன்—சூராதி சூரன் எனத் திரிந்த திரிபாதலின் அது வினாவன்று. ஆதி என்பது தமிழ்ச்சொல்லேயென வற்புறுத்திய தமிழன்பர்கள் பலரும் முன்மை சுட்டிய 'ஆ' என்னும் இடைச் சொல்லையே சான்று காட்டினர். வினையடியாகத் தோன்றிய பெயர்ச்சொல் வடிவத்தை அவர்கள் வரையறுக்கவில்லை. அவர்கள் கூற்றின் வண்ணம், போகு—போது எனத் திரிவதுபோல் ஆகு—ஆது எனத் திரிந்த தாயின். ஆது என்னும் வினையின் முக்காலப் புடைபெயர்ச்சி தமிழில் யாண்டும் காணப்படவில்லை. ஆயின், ஆதி என்னுஞ் சொல் மிகப் பழைய காலத்தையும், மிக முந்தைய நிலையையும் குறித்த பெயர்ச் சொல்லாகப் பெருக ஆளப்பட்டுள்ளது. இப் பெயர்ச் சொல் வடிவமே முந்தைய எனப் பொருள்படும் பெயரெச்சப் பொருளையும், இச் சொல்லுக்குத் தந்தது. ஆதலின், பெயர்ச்சொல் பொருளே இதன் முழுமையான பொருள். ஆதி, தமிழ்ச் சொல்லாயின் தலைமையையும் முதன்மையையும் ஆகிய பொருள்களைச் சுட்ட வேண்டுமேயன்றி, காலத்தால் முற்பட்ட பழமையைச் சுட்டுவது காலத்தின் கோலத்தால் ஏற்பட்ட வழிநிலைப் பொருளேயன்றி முதற்பொருள் ஆகாது. பழையது என்னும் சொல் பழமையைக் குறிக்குமேயன்றி தலைமையையும் முதன்மையையும் குறிக்காது. தொன்மை என்னுஞ் சொல்லும் இவ்வாறே. முதன்மை என்று பொருள்படும் சொல்

மட்டும் காலத்தால் முற்பட்ட நிலைமையையும் அகவையால் மூத்த தலைமையையும் குறிக்கும். முன்னவன் என்னும் சொல்லை ஒப்பு நோக்குக. எனவே, ஆதி என்பது முதன்மை சுட்டிய பிறகே பழமையைச் சுட்டியிருக்கிறது என்பது போதரும்.

7. தமிழில் முதன்மை சுட்டிய பொருளே ஆட்சியில் பெருகி வழங்கியிருக்கிறது. பழமை சுட்டிய பொருள் வடநாட்டு மொழி களில் இச் சொல்லுக்கு ஏற்றப்பட்டிருக்கிறது. ஆதலின், முன்மை சுட்டிய பிறகு முதன்மையையும் தலைமையையும் சுட்டிய ஆதி என் னும் தனிச்சொல் வடநாட்டிற்குச் சென்று வடநாட்டில் பழமைப் பொருளில் திரிந்ததால் அதனை (பிராகிருத முதலிய வடதமிழ்) வடநாட்டுச் சொல்லென்று பாவாணர் வரையறுத்தார்.

8. தமிழிலுள்ள பெயரெச்சங்கள் அனைத்தும் அகரவீறு கொண்டவை. முதல, எளிய, வலிய, நல்ல என்பவற்றை ஒப்பு நோக்குக. 'ஆதி' தமிழிலக்கணக் கட்டுக் கோப்புக்குள் தோன்றி வளர்ந்த சொல்லாயின் ஆதிய என்றாற்போல் அகரவீற்றுப் பெய ரெச்சமாயிருத்தல் வேண்டும். இகரவீற்றுப் பெயரெச்சம் தமிழில் யாண்டும் ஆளப்படவில்லை. இகரவீற்றுப் பெயர்கள் பெயரெச்சம் போல் முன்னுறுப்பாகிக் கூட்டுச்சொல்லாகுமிடத்து கோடி + கரை— கோடிக்கரை, மீதி + பணம் மீதிப்பணம் என்றாற்போல் வல்லெழுத்து மிகுதல் வேண்டும். ஆதி பகவன் என்னும் கூட்டுச் சொல்லில் வல்லெழுத்து மிகாமை அறிக. இஃதொன்றே அதனை வடசொல் லெனக் காட்டவல்லது.

9. வடமொழியில் *ādi*—beginning, commencement, first எனப் பொருள் படுகிறது. இந்திராதி தேவர் என்றவிடத்து இந்திரன் முதலாகிய தேவர் எனப் பொருள்படும். வளர்தல், மேம்படல், ஆகுதல் எனப் பொருள்படும் அகு—ஆகு வினை வடிவே ஆதி என்னும் வடசொல்லின் மூலம் என்பதும், பெயர் வடிவம் வட புலமொழி வழித்தென்பதும் இதனாலும் போதரும்.

10. வடமொழி தவிர்ந்த மேலையாரிய மொழிகளில் ஆதி என்னும் சொல்லாட்சி காணப்படவில்லை. வடதமிழ் சொன்மூலமே வடமொழியில் ஆதி என வடிவு கொண்டுள்ளது. இது முன்னால் அல்லது முதலிலிருப்பதைக் குறித்த அஃறிணையொருமைச் சொல் லாக வழக்கூன்றியக்கால், காரி—கருத்த காளையைக் குறித்தது போல் ஆதி—மேலிருக்கும் பொருள்; முன்னால் அல்லது முதலி லிருக்கும் பொருளை அல்லது உயிரியைச் சுட்டியதாகல் வேண்டும்.

11. காரி, குறிப்பிட்ட கரிய காளையை அல்லது கரிய வேறு பொருளைச் சுட்டும்போது மட்டும் அவ் வடிவு கொள்ளும். காரிப்புள்,

காரிக்கிழார் என்பவற்றை ஒப்பு நோக்குக. கன்னங்கரேலென் றிருக்கும் தன்மையை முழுமையாக விளக்கக் காரி பெயர் வடிவு பெற்றது. இனி, பல்வகை நிறவேறுபாடுகளிலிருந்து கரிய நிறத்துப் பொருளைப் பிரித்துக் கூறவேண்டியவிடத்து கருஞ்சீரகம், கருமணி, கரியவிழி எனப் பண்பீறும், குறிப்புப் பெயரெச்ச வீறும் கொள்ளும். அங்ஙனம் பொதுப்பொருளில் ஆதி என்னும் சொல் கரிய என்றாற் போல் தமிழில் ஆதிய எனக் குறிப்புப் பெயரெச்சமாகாததால் அது வடசொல்லே எனத் தெளிக.

12. ஆதி என்னுஞ்சொல் முதல், முதலிய, முதலில் என்னும் பொருளில் கல்லாத மக்களின் பேச்சுவழக்கில் இன்றுகாறும் இடம் பெறவில்லை. மண்ணுக்குரிய சொல்லாயின் மக்களிடையன்றோ வழங்கியிருக்கவேண்டும்?

13. சொல், வடிவத்தால் முற்றும் தமிழாயும் பொருளாட் சியில் தமிழகத்தில் தோன்றிய பொருளல்லாமல் ஏனைய திரவிட நாடுகளிலோ அல்லது வேற்றுமொழிச் சூழல்களிலோ வளர்ந்து பொருள்கொண்ட சொல்லைத் தமிழ்ச் சொல்லாக ஏற்றுக்கொள்வ தில்லை. சொல்லும் பொருளும் ஒத்திருந்து தமிழில் வழங்குமாறு பிற திரவிட மொழிகளில் வளர்ந்திருந்தால் அவற்றையும் தமிழ்ச் சொல் என்று ஏற்றுக்கொள்கிறோம். இல், மனை, வீடு ஆகியவை தமிழிலும் திரவிட மொழிகளிலும் ஒத்து வழங்குகின்றன. இல் என்பதைத் தெலுங்குச்சொல் என்றும், மனை என்பதைக் கன்னடச் சொல் என்றும் நாம் சொல்வதில்லை. ஆயின், உறை என்பது இல் மனை போன்ற சொற்களைப் போன்றே மனைவியையும் குறிக்கலாம். பிராகுவி மொழியில் உறை என்பது வீட்டையும், பாசுகு மொழியில் உறை என்பது மனைவியையும் குறிக்கும் சொல்லாக இன்றும் வழங்கி வருகிறது. இலக்கண நெறிப்படியும் சொற்பொருள் வளர்ச்சிப்படியும் உறை என்பது மனைவியைக் குறிக்கும் தமிழ்ச் சொல்லென ஒப்பமுடிந்தாலும், தமிழ் உலக வழக்கிலும் இலக்கிய வழக்கிலும் உறை என்னும் சொல் மனைவி என்னும் பொருளில் ஆளப்படாததால் மனைவியைக் குறிக்கும் உறை என்னும் சொல்லைப் பாசுகு மொழிச்சொல் என்று சொல்வதல்லது, தமிழ்ச் சொல் லென்று எவரும் கூறார். இதுபோன்றே ஆதி என்பது சொல் வடிவத்திலும் பொருள் வடிவத்திலும் திரிபுற்று வழங்கும் தமிழா யினும், இத்தகு சொற்றிரியும் பொருள் வளர்ச்சியும் வடநாட்டில் தோன்றி வளர்ந்திருத்தலால் இதனை வடசொல் என்று பாவாணர் கருதினார்.

14. ஆதி என்பது தமிழுக்கு வேர்வழி தன்சொல்லாயினும் தென்சொல்லன்று என்பதைப் பாவாணர் தெளிவாக உறுதிப்படுத்

தினர். தனிமாந்தனைப் பிறந்து வளர்ந்த சூழலால் இன்னமொழியினன், இன்னநாட்டினன் என வரையறுப்பதுபோல சொற்களையும் அவை பிறந்து வளர்ந்த சூழலால் இன்ன மொழிக்குரியன என வரையறுப்பர். ஆதி என்னும் சொல் வடநாட்டில் சிந்துவெளித் தமிழின் கிளை வழக்காகத் தோன்றி வளர்ந்து தமிழிலும் கடன் கொள்ளப் பட்டிருப்பதால் அதன் பிறந்து வளர்ந்த சூழலைத் தமிழில் காண முடியவில்லை. அத்தகு சூழல் வடபுலமொழிகளில் காணக் கிடக்கிறது. சமற்கிருதத்திலும் தமிழிற்போன்றே கடன்சொல்லாக வழக்கூன்றியுள்ளது. சமற்கிருதத்திலும் ஆதி என்னும் சொல் பிறந்து வளர்ந்த சூழலைக் காணமுடியவில்லை.

15. மாமியார் இறந்ததும் மருமகள் இல்லக் கிழத்தியாகி விடுகிருள். தமிழ்த்தாய் என்னும் மாமியார் என்றும் கன்னியாயிருப்பதால் வேற்றுமொழிச் சொற்கள் என்னும் மருமகள்மார்களெல்லாம் இல்லத் தலைமையேற்க முடியாமல் மூத்துப் போகிருர்கள். ஆதி என்னும் சொல்லுக்கும் இதே நிலைதான்.

முகம் என்னும் தமிழ்ச்சொல் தெலுங்கில் மூதி (muti) என வழங்குகிறது. ஆதி தூய தமிழ்ச் சொல்லென்போர் தெலுங்கு மூதியையும் தமிழெனக் கொள்வரோ? தமிழில் வந்தேறிய சொல்லெல்லாம் செந்தமிழாகுமோ? உன்னுக.

தமிழ்ச்சொல் என்று எவ்வாறு வரையறுப்பது?

1. தமிழில் கருக்கொண்டு (வேர்கொண்டு) தமிழ்நாட்டில் உருப்பெற்றிருக்கவேண்டும். தமிழ்நாட்டில் என்பது வரலாற்றுக்கு முந்தைய தமிழ்நாட்டையும் குறிக்கும்.

2. தமிழில் இருவகை வழக்கில் எக்காலத்திலேனும் வழங்கியிருக்கவேண்டும். இருவகை வழக்கென்பது ஏடேருச் சொற்களனைத்தையும் உள்ளடக்கும்.

3. ஏனைத் திரவிட மொழிகளுக்கோ பிறமொழிகளுக்கோ சென்று வழங்கித் திரிபுற்று மீண்டும் தமிழுக்கு வந்ததாக இருத்தலாகாது.

   எ-டு: ஆதி, தீரன்.

4. தமிழில் கருக்கொண்டு வரலாற்றுக்கு முந்தைய தமிழகத்தில் உருப்பெற்றுத் தமிழ்நாட்டில் யாண்டும் ஆளப் படாமல் ஏனைத் திரவிட மொழிகளிலோ உலக மொழி

களிலோ செந்தமிழ் வடிவு திரியாமல் வழங்கி வரும் சொற்கள் தமிழ்ச்சொற்களாகவே கொள்ளப்படும்.

எ - டு: தெ. அம்முதல்—விற்றல், ஒத்த மதிப்புள்ள பொருள்களைப் பண்டமாற்றிக் கொள்ளுதல்.

5. சொற்கட்டின் படிமுறை வளர்ச்சி அல்லது திரிபு தமிழிலக்கண மரபு தழுவியதாயிருத்தல் வேண்டும்.

6. செய்ப்படுபொருள் குன்றியவினை, குன்றாவினை; தன்வினை பிறவினை; வினையெச்சம், பெயரெச்சம்; பெயர்வினை இடைஉரி போன்ற பல்வேறு சொல்வகைகளில் ஏற்ற பெற்றி புடைபெயர்வதாகவும், புடைபெயர்ந்த சொல்லாட்சிகளைப் பெற்றதாகவும் இருத்தல் வேண்டும்.

7. நெடுங்காலமாக வழக்கூன்றிச் செஞ்சொல் போன்றே தமிழில் இரண்டறக் கலந்துவிட்ட வேற்றுமொழிச் சொற்கள் ஒரு சில தள்ளப்படாவெனினும் தென்சொல் லென்று கொள்ளப்படாவென அறிக. அருகிப் பயிலும் சொல் அன்றாடப் பயிலும் சொல் என்னும் இருவகையுள் இரண்டாம் வகை பொதுமக்களிடை நிலைத்து வழங்கும் அடிப்படைச் சொல்லாதல் வேண்டும்.

எ - டு: முன்னால், முதலில் என்பன அன்றாடம் பயிலும் சொற்கள். ஆதி என்பது தமிழ்நாட்டில் தோன்றி வளர்ந்த சொல்லாயின் நாட்டுப்புறக் கல்லாத மக்கள் முன்னால் நில் என்பதை ஆதில் என்றேனும், முதலில் வந்தான் என்பதை ஆவந்தான், ஆதிவந்தான் என்றேனும் தமிழகத்தின் எப்பகுதியிலாவது வழங்கியிருப்பர். ஆதி அங்ஙனம் உலகு வழக்கு அடிப்படைச் சொல்லாக வழக்கூன்றவில்லை.

———

## பெரிய புராண விரிவுரை

# ஆட்சிமொழிச் சிந்தனைகள்

[தமிழ்த்தொண்டர் கோ. முத்துப்பிள்ளை

மாக்கவி பாரதி நகர், சென்னை-600 039.]

## ARTISAN PLOT

அண்மையிலே Artisan குடியிருப்போர் சங்க விழாவிலே கலந்துகொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. அன்புடன் அழைத்துச் சென்ற அருமை நண்பர்களிடம் சிறிய வினவொன்றைத் தொடுத்தேன். Artisan என்னும் சொல்லையும் அழகு தமிழிலே மொழிபெயர்க்கலாமே என்று கேட்டேன். அந்த நண்பர்களிலே ஒருவர் Artisan Plot என்னும் பெயரைச் "சிறுமனை" என்று மொழிபெயர்க்கும் ஒரு கருத்தினை நாங்கள் ஆய்ந்து வருகின்றோம் என்று நயமாகக் கூறினார்.

கருத்துக்குப் பொருத்தமான "கைவினைஞர் மனைக்கட்டு" என்னும் மொழிபெயர்ப்பு இருக்கையில் "சிறுமனை" என்னும் பெயர் வழிபார்த்து வருகைதரும் வகைதான் என்னவென்பது விளங்காமல் திகைத்தேன். சிறிதுநேரம் சிந்தித்தபின்னர் "கைவினைஞர்" என்னும் பெயர் கைவினைஞர்களாலேயே ஏற்கப்படவில்லை என்பதைத் தெரிந்துகொண்டேன்!

சிக்கல் இப்போது தெரிந்துவிட்டது. முதலில் Plot என்னும் சொல்லைக் கவனித்துப் பார்ப்போம். அதன் பின்னர் Artisan என்னும் சொல்லை அணுகிப் பார்ப்போம்.

பல பொருள் தரும் ஒரு மொழியாகிய இந்த Plot என்னும் சொல் இடர்கூட்டும் ஒரு சொல்லாகும்! இதற்குக் "கூட்டுச் சூழ்ச்சி" என்னும் ஒரு பொருள்கூட இருக்கின்றது!

ஒரு வீட்டின் தலைவாயில் சுவரிலே பார்த்தேன். Pilat No. 132 என்று எழுதியிருந்தது! இஃது ஆங்கிலந்தானா, அவ்வாறாயின் என்ன பொருள் என்னும் திகைப்பு ஏற்பட்டது! எழுத்துக் கூட்டலிலும் கூட்டுச் சூழ்ச்சி நம்மை விட்டபாடில்லை போலும்!

Plot என்னும் சொல்லிற்கு நமக்குத் தேவையான பொருள் "மனைக்கட்டு" என்பதாகும். Site என்பதை ஏற்கெனவே "மனைக் கட்டு" என்று அழைத்து வருகின்றோம். ஆகையால் Plot என்பதற்கு "மனை" என்பதே போதுமான, பொருத்தமான சொல்லாகும்.

''மனை'' என்னும் சொல்லின் அடியாகவே ''மனைவி'' என்னும் சொல் பிறந்திருக்கின்றது! ''மனை'' என்று சொல்லிவிட்டாலே அது மனைவியையும் குறிக்கும். ''பிறன்மனை நோக்காத பேராண்மை'' என்று வள்ளுவர் குறிக்கின்றார். மனை வாங்காத மனிதனை மனைவியும் மதிக்கமாட்டாள்! ஆகவே ''மனை'' என்னும் சொல்லையே நாம் ஏற்றுப் போற்றுவோமாக!

Art என்னும் அருமையான ஆங்கிலச் சொல்லிலிருந்துதான் Artisan என்னும் சொல் பிறந்திருக்கின்றது. ''கலை'' என்னும் கற்கண்டு போன்ற பொருளுடைய இந்தச் சொல்லிற்கு Skill அல்லது ''திறன்'' என்னும் பொருளுமுண்டு. Skill என்பது Arm வழியாக, அஃதாவது கைவழியாகக் கிடைப்பதாகும். Arm என்றும் Skill என்றும் இலங்கும் இரு சொற்களையும் இணைத்துப் பார்த்தால், கையினால் கலைபயின்று, திறமையாக வினையாற்றுவோரே Artisans என்பது புலனாகும். ஆகவே அருமையான Artisan என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு அதைவிட அருமையான ''கைவினைஞர்'' என்னும் தமிழ்ச்சொல் அமைக்கப்பட்டிருக்கின்றது. ''கைவினைஞர்'' உண்மையில் கலைவினைஞரே ஆவர்.

இன்றைய நிலையில் பார்த்தால், கைவினைஞர் குடியிருப்புகளில் பல வினைஞர்களும் குடியேறியுள்ளனர்! ஆகவே அன்று சூட்டிய ''கைவினைஞர்'' என்னும் பெயர் என்றும் பொருந்தாது போலும்! மேலும் ''கைவினைஞர்'' என்னும் சொல்லிற்குச் ''சிறிய தொழிலாளர்'' என்னும் பொருள் எவ்வாறோ ஏற்பட்டுள்ளது. எனவே ''கைவினைஞர்'' என்னும் பெயர் கவினுறு பெயராக இருந்த போதிலும், அதனைக் கைவிடுதலே கருதற்பாலதாகும்.

ஒரு ground, ஒன்றரை ground, இரண்டு ground என்று பேசுகின்றோம். இந்த ground என்னும் சொல்லையும் ''மனை'' என்றே சிலர் செப்புகின்றனர். ''எனக்கு அங்கே ஒரு குண்டு இருக்கிறது'' என்று சிற்றூர்களில் சிறப்பாகப் பேசுவார்கள். ஈண்டு, ''குண்டு'' என்னும் சொல் ''வயல்'' என்னும் பொருளைத் தருவதை உணர்ந்துகொள்கின்றோம். Field என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு நேராக எத்தனையோ எழில்மிகு தமிழ்ச் சொற்கள் இலங்குகின்றன. எடுத்துக்காட்டாக, பணை, செய், கழனி, பழனம், புலம், வரப்புள் என்னும் சொற்களை எண்ணிப்பார்க்கலாம். ஆகையால் ''குண்டு'' என்னும் சொல்லை நாம் கண்டுகொண்டு, கடன்வாங்கிக் கொள்ளுதலே சாலச்சிறந்தது! ground என்பதைக் ''குண்டு'' என்று குறுக்கி ஒலிக்கலாமே!

மூன்றில் ஒரு பங்கு உள்ள குண்டுவிற்குத்தான் Artisan plot என்னும் பெயர் ஏற்பட்டுள்ளது, எனவேதான் நம் இனிய நண்பர்கள்

இதனைச் ''சிறுமனை'' என்று எண்ணிப் பார்க்கின்றனர். ஆயினும் Artisan plot என்னும் பெயரைப் ''போதுமான மனை'' என்று நாம் போற்றலாம். இந்தச் சிறிய மனையிலே பெரிய மாளிகைகள் எழுந்து விண்முட்டி நிற்பதை நம் கண்முன்னால் காண்கின்றோம். ''போதுமான மனை'' அல்லது ''அளவான மனை'' Artisan plot ஆகும். உடல் நலத்திற்கு உகந்த சாப்பாடு 'அளவு சாப்பாடு.' அதைப்போலவே ''அளவு மனையே'' Artisan plot ஆகும். அளவோடு பெற்று வளமோடு வாழ அளவுமனை போதுமன்றோ?

பெரிய மனைகளைப் பேணுவது கடினம். சிறிய மனைகளைச் சீராய்ப் போற்றலாம். அளவு மனைகளே அழகிய மனைகள்.

நடைமுறையில் Artisan plot என்று யாரும் நீட்டிப் பேசுவதில்லை. A. P. என்று மட்டும் சொல்லிமுடிக்கின்றனர். இதனை அக மகிழ்ச்சியுடன் இனிமேல் ''அ.ம'' என்று அழைக்கலாமன்றோ?

Artisan குடியிருப்போர் சங்க விழாவில் சிறப்புரை ஆற்றிய புலவர் கோ. அப்பன் அவர்கள் ''அளவு மனை'' என்னும் மொழி பெயர்ப்பை ஏற்றுப் போற்றினர்.

Artisan plot = அளவு மனை.

---

## தமிழுக்கும் கடலிற்கும் சிலேடை

[மூவரையன், தஞ்சை.]

முத்தமிழ்ச் சங்க மடியில் வளருவதால்
சித்தமுறும் பாங்கயலார் சீர்பெறலால்—மெத்த
கலியுமா கப்பல் கடந்திடலால் என்றும்
ஒலிகடல் ஒக்குந் தமிழ்.

தமிழ்: மூன்று தமிழ்ச் சங்கத்தின் மடியில் வளர்வதால் அயல் மொழியாளர் இதன்மீது மனம் வைத்துக் கற்க, அவர்களும் சிறப்புறும் தன்மையுடையதால் ஒலியாகி வருவதற்குப் பற்களைக் கடந்து வருவதால் (கலியுமாகப் பல் கடந்திடலால்).

கடல்: முத்து; அமிழ் சங்கு அடியில் வளருவதால் (சித்தம் - உப்பு) உப்பு உறுவதினால்; மீன்கள் சேர்ந்திருப்பதால் (கயல்ஆர்) ஒலியுடன் கப்பல் கடல்வழி செல்வதால்.

# எண்மர் எண்மணி மாலை

[மருத்துவர் மறையரசன்]

(முன் இதழ் ௬௧௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

**5.1. வீரமாமுனிவர் :**

(வெண்பா)

மேம்பா டுடையவுன்றன் மேய்ப்பான் இயேசுவினைத்
தேம்பா தெடுத்துவளர்த் தோன்வளனே—தேம்பா
வணியாவான் வாடா அருள்மகனே என்று
மணியாய்த் தமிழ்படைத்தாய் மாண்பு.

**5.2. பரிதிமாற் கலைஞர் :**

(அகவல்)

மாண்பொடு கிறித்துவக் கல்லூ ரியிலே
தேன்பெறு தமிழ்க்கும் பேரா சானாய்
வாழ்ந்திடுங் காலே நேர்முகத் தேர்வில்
ஆழ்ந்தறி வோடே அருந்தமிழ்த் தோன்றல்
மறைமலை கண்டேனே : கேட்டனே எதற்கும்
குறையிலை விடைவரும் : குற்றிய லுகரம்
எடுத்துக் காட்டெனக் கலைஞனு முடனே
அடுத்து வரும்விடை அதுதெரி யாது !
தெரியா தென்ற மொழியைக் கேட்டே
உரியா னிவனென உணர்ந்தனே ஏற்றனே
திறத்தினைப் போற்றும் கலைஞர் !
மறையா தெம்மறை மலைதனித் தமிழே !

**5.3. மறைமலையடிகள் :**

(கட்டளைக் கலித்துறை)

தனித்தமிழ் என்னும் இயக்கமுந் தோன்றித் தகையெழிலாய்
இனித்திட வைத்தநல் லேந்தலே இப்புத் தியக்கமதே
தனிநடை யிட்டுப் புரட்சிகள் செய்யத் தளிர்விடுமுன்
நனியொரு செம்மையை நாட்டிய தெவ்வகை நவிலுதியோ ?

## 5.4. பாவேந்தர் :

(வஞ்சி விருத்தம்)

நவிலுந்தொறும் நவிலுந்தொறும்
நகையைத்—தருஞ் சாரல்
புவியோங்கிட இடர்கள் களை
புரட்சிக்கவி கூறல்
செவியேறிட நல மேவினை
விளக்கந்தரல் ஏற்றித்
தவியாய்மனம் என வேதமிழ்
இயக்கம்பெறும் போற்றும்.

## 5.5. பாவாணர் :

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

போற்றுகின்ற வகையினிலே புகழோடு நின்றிருந்து
போனதிசை தெரியா தின்று
வீற்றிருக்கும் கடலடியில் விளக்கமொடே அமிழ்ந்திருக்கும்
விஞ்சுபுகழ்க் குமரிக் கண்டம்
தோற்றமொடே எழுந்திருந்தால் தொல்புகழும் பெருமையோடு
தோன்றுமெனப் பெருமை ஆய்ந்தே
ஏற்றமெனத் தரவந்த ஏறுநிகர் பாவாணர்
எந்தமிழ்க்குக் கிடைத்த திருவே!

## 5.6. வ. சுப்பையா (பிள்ளை) :

(மருட்பா)

திருவரங்கர் பேர்சொல் நிறுவனத்தை அற்றைத்
திருசங்கர் பேர்மாற்றிப் பின்னர்—பெரியதொரு
சைவசித் தாந்தக் கழகங் கண்டுநூல்
தெய்வம் நிலைபெறச் செய்யும்
ஐயன் சுப்பையன் ஆற்றல் சிறிதோ.

## 5.7. பண்ணுய்வாளர் :

(சிந்து)

சிறிதே கலப்பென வறிதே இருந்தால்
சிதையும்; பெருமைதான் குறைந்திடும்—பின்னர்
புதையும் தமிழிசை மறைந்திடும்

குறியாய் இருந்திடக் குறைகள் களைந்திட
குவலயத் திற்புகழ் எழுந்திடும்—பிழை
அவலமெ ரிக்குந்தீ கொழுந்திடும்.

நிறையாய் இசையை நிலவாய்க் குளிர்ந்து
நிலைத்திடச் செய்தனை ஆய்வையே—உடல்
களைத்திட நீயுமே ஆய்வையோ !

இசையே நீயுமோர் இசைஞா யிறென்றால்
இசையும் குளிர்வதும் ஏனையா ?—உள்ளம்
இசைந்திடப் பெறுவம் நற்றேனையா ?

## 5.8. பாவல ரேறு :

(கலி வெண்பா)

தேனினும் இன்பாத் தெளியத் தருகின்ற
வானின் றெளிரும் வலிகதிர்—கூனன்

முதுகை நிமிர்த்தும் புதியதோர் ஆற்றல்
மதுவை நிகர்மொழி ; அன்பு—ததும்பும்

விழிகளும் மேன்மைத் தமிழுயர் வெய்ய
வழிகளுங் காட்டும் நகையும்—குழியுள்

கிடந்தே உழல்வோன் கிளர்ந்தே எழுந்து
நடந்திடும் நாளிலே நீங்கும்—முடியென

நீண்டஓர் ; குஞ்சும் நிலைத்த குறுந்தாடி
மூண்டு மறைக்கும் முகப்பொலிவும்—ஆண்டு

ஒருங்கிணைந் தார்ப்போம் ; உழைப்போம்போர்த் தானே
நொறுங்கும் பகையெனக் காட்டி—குறுகுறு

வென்றே நடக்கும் நடையும் தமிழ்ப்பகை
வென்றே நடக்கும் மறமுடன்—நன்றே

உலகத் தமிழின் முன்னேற்றங் காணக்
கழகம் அமைத்த முதல்வன்—பழகக்

கனியின் சுவைமிகுந்த ஐயன் தொடர
இனியும் தயங்குவ தென் ?

———

# கோனேரிராசபுரத்துக் குழப்பங்கள்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம்.பி.பி.எசு., டி.ஓ.]

(முன் இதழ் ௧0௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

இந்நிலையில் திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் குறிப்பது போல் இரண்டாம் இராசேந்திரன் காலத்தில் இக் கோயில் இறைவன் உமைக்கு நல்லவர் என்று பெயர் மாற்றம் பெறவில்லை என்பதும் மூன்றும் இராசேந்திரன் காலத்தில்தான் இப்பெயர் மாற்றம் நிகழ்ந்தது என்பதும் தேற்றம்.

இனி 'மதுராந்தகி ஈசுவரம்' என்பது இக்கோயிலுக்குத் தரப் பட்ட பெயரா அல்லது அப்பெயரில் வேறு கோயில் இருந்ததா என்று காண்போம். இரண்டாம் இராசேந்திரனின் இரண்டு கல் வெட்டுகள் இக் கோயிலைக் குறிப்பது போலவே, இவன் தமையன் முதலாம் இராசாதிராசனின் இரண்டு கல்வெட்டுகள் இவ்வூரில் இருந்த உத்தமசோழ விண்ணகர் என்ற திருமால் கோயிலைப்பற்றிக் குறிப்பிடுகின்றன.[25] இக் கோயில் இராசாதிராசனுக்கு முற்பட்ட எந்த மன்னனுடைய கல்வெட்டுக்ளிலும் குறிக்கப்படவில்லை. இப்போது இக்கோயில் காணுமாறு இல்லை. இது முதலாம் இராசாதி ராசனின் கல்வெட்டுகளில் மட்டுமே இடம் பெறுவதால் இக் கோயில் அவனால் அல்லது அவன் காலத்தில் எழுப்பிக்கப்பட்டதாகக் கருதலாம். மதுராந்தகி ஈசுவரமுடையார் கோயிலும் அதுபோலவே இரண்டாம் இராசேந்திரனால், தன் மகள் பெயரால் புதியதாக எடுக்கப்பட்டுத் தற்போது சுவடழிந்து போன ஒரு கோயிலாகும்.

செம்பியன் மாதேவி முதலாம் இராசேந்திரன் காலம் வரை வாழ்ந்தவர். அப் பெருமாட்டியின்பால் முதலாம் இராசராசனும் முதலாம் இராசேந்திரனும், அவன் மக்களும் கொண்டிருந்த அன்பும் நேயமும் பல கல்வெட்டுகளால் வெளிப்படுகிறது. அப்படியிருக்க, அப் பெருமாட்டி தன் அன்புக் கணவரின் பெயரால் கட்டிய கோயிலின் பெயரை மாற்ற எவன் துணிவான்? அதுவும் முதலாம் இராசேந்திரனின் மகனான இரண்டாம் இராசேந்திரன் செம்பியன் மாதேவியாரின் திருவருள் பெற்றவனாய் இருந்திருப் பான் என்பது திண்ணம். அத்தகைய பெருமகள் சோழவள நாட்டின் ஈடுஇணையற்ற பேரரசி தன் கணவர் நினைவாகக் கட்டு வித்து, அதில் தன் கணவர் சிற்பத்தையும் வடித்துக் கண்ணெனக் காத்துப் போற்றிய இக் கற்றளியின் பெயரை மாற்றித் தன் மகள் பெயரைச் சூட்டியிருப்பான் என்று நினைப்பது கூடத் தவறாகும்.

---

25, ARE 655, 656 of 1909.

மேலும் இவனுடைய ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு திருநல்லம் கோயிலுக்கு ஒரு 'மா' நிலத்தை ஊரவை தந்ததாகக் கூறுகிறது. திருநல்லம் கோயில்தான் மதுராந்தகி ஈசுவரமுடை டார் கோயிலென்றால், ஏன் இந்த ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல் வெட்டில் அப் பெயர் இல்லை? இக் கல்வெட்டு மட்டும் திருநல்லத்து மகாதேவரைக் குறிப்பது ஏன்? இக் கல்வெட்டைப் பொறித்த இரண்டே ஆண்டுகளில் இராசேந்திரன் மனம் மாறிவிட்டானு? வேடிக்கைதான்!

அருகில் இருக்கும் கோயில்கள் செங்கல் தளிகளாக இருந்தால் அக் கோயில்களுக்குச் செய்யப்படும் கொடைகள், அக் கோயில்கள்பற்றிய செய்திகள் முதலியவற்றை அக் கோயில்களுக்கு அருகில் இருக்கும் கற்றளிகளில் பொறித்துவைப்பது வழக்கம். இங்கும் அதுபோலத்தான் நடந்துள்ளது. இரண்டாம் இராசேந்திரன் காலத்தில் அவன் மகள் பெயரால் கட்டப்பட்ட செங்கல்தளிதான் மதுராந்தகி ஈசுவரம். அவன் தமையன் காலத்தில் இருந்த உத்தம சோழ விண்ணகர் போல, இராசேந்திரன் காலத்தில் இருந்த மதுராந்தகி ஈசுவரமும் இன்று காணுமாறு இல்லை. இவையிரண் டுமே சுவடழிந்துபோய்க் கல்வெட்டுகளில் மட்டுமே வாழும் கோயில்கள். எனவே திரு. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் குறிப்பது போல் திருநல்லம் உமைக்கு நல்லார் கோயிலும், மதுராந்தகி ஈசுவரமுடையார் கோயிலும் ஒரே கோயிலன்று என்பதும், இரண்டும் வேறு வேறு கோயில்கள் என்பதும், மதுராந்தகி ஈசுவரமுடையார் கோயில், இருந்து அழிந்துபோன கோயிலென்பதும் தெள்ளத் தெளிவாய் விளங்கும்.

கோனேரிராசபுரத்துக் குழப்பங்கள் நான்கு இங்கு ஆய்வுக்குக் கொள்ளப்பட்டன. இவ்வூரிலுள்ள அருள்மிகு உமாமகேசுவரர் கோயில் டாக்டர் இரா. நாகசாமி குறிப்பதுபோலப் பள்ளிப்படைக் கோயில் அன்று என்பதும், இங்குள்ள கானத்தேவர் செப்புத் திரு மேனி திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் குறிப்பதுபோல் மண வழகர் அன்று என்பதும், இங்குள்ள சிற்பத்தொகுதியில் திரு. வேதாசலம், திரு. பரணீதரன், திரு. பட்டாபிராமன், திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் ஆகியோர் குறிப்பது போல் செம்பியன் மாதேவியார் திருவடிவம் இல்லையென்பதும், மதுராந்தகி ஈசுவரமுடையார் கோயில் திரு. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் குறிப்பதுபோல் இக் கோயிலுக்குத் தரப்பட்ட வேறு பெயரன்று; அது இருந்து அழிந்த வேறொரு கோயில் என்பதும் தெளிவாக்கப்படு கின்றன.

———

# தன்னையறிந்த தவயோகி

''இந்த உலகத்திலுள்ள எல்லா உயிர்களில் நானும், என் உள்ளே எல்லா உயிர்களும் கலந்திருக்கின்றன'' என்று கூறுகிறார் கடலூர் ராஜரிஷி அருட்டிரு ப. சிதம்பரம் பிள்ளை அவர்கள்.* மன்னுயிரையும் தன்னுயிர்போல் பேணும் இத்தவயோகி இல்லறத்தின் கண் நின்று துறவு வாழ்வு வாழ்பவர். 83 வயதாகிய நிலையில் உடல் தளர்ந்துவிடினும் உள்ளம் தளராது உலகு உய்யவேண்டுமென்று எப்போதும் ஆன்ம ஒளியை (ஆத்ம ஜோதி) வழிபட்டு வருபவர். ''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்'' என்ற திருமூலர் வாக்கைத் தம் வாழ்க்கையில் உண்மையெனக் கண்டுபிடித்தவர். திருக்கோயில்களுக்குச் சென்று வழிபடுவதைவிட ஒவ்வொருவரும் தத்தம் உள்ளத்தில் குடிகொண்டுள்ள ஆன்ம ஒளியை வழிபட்டுத் தம் உளமொன்றிய வழிபாட்டால் தம் இதய கமலங்களில் உறையும் முழுமுதற் கடவுளின் பேருருவை (விசுவரூப தரிசனம்) கண்டு மகிழ்தலே உடம்பெடுத்தமையின் கடமை என்கிறார் இவர். நாட்டில் பல்வேறு சிக்கல்கள் எழும்போது அவற்றைத் தம் ஆத்ம சக்தியால் தீர்த்துவைக்க முடியுமென்று உறுதியாக நம்புபவர். ஈழத்து இனச்சிக்கலில் கூட, தமிழர்கள் தம் ஆன்ம ஒளியை வழிபட்டால் இலங்கைத் தமிழர்கட்குச் சிங்களவர்கட்குச் சரிசமமான உரிமை கிடைக்கச்செய்ய முடியுமென்கிறார்.

பெருந் தலைவர்களான திருவாளர்கள் ராஜாஜி, பக்தவத்சலம், கருப்பையா மூப்பனார், மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன், ஆர். வெங்கட்ராமன் முதலியோருக்கு அவ்வப்போது கடிதவழி தம் ஆத்ம சோதனையின் முயற்சி பற்றித் தெரிவித்துள்ளனர்.

இவர் உலக மக்கட்கும் உலக அரசுகளுக்கும் விடுக்கும் செய்தி யாவது: ''இவ்வுலக முழுவதற்கும் மூல மெய்ப்பொருளானவர் என் இதய கமலத்தில் ஒப்பற்ற தலைவனாக இருந்துவருகிறார். எல்லா உயிர்களிலும் நான் இருக்கிறேன். என் உள்ளத்தில் எல்லா உயிர்களுமிருக்கிறார்கள். ஒன்றே குலம் ஒருவனே தெய்வம். அவன் ஒவ்வொரு மனித உள்ளத்திலும் ஒளி மயமாக இருக்கிறான். நாம் (சைவமாக) கொல்லாமை என்னும் நோன்பு பூண்டவராக இருந்தால் போதும். அவன் அருள் கிடைக்கும். அவனே குருவாக வந்து ஆட்கொண்டு அறிவோடு கலந்து ஆதி மூலமாகிய மெய்ப்பொருளோடு இரண்டறக் கலக்கும்படி செய்துவிடுவான்.

அணுகுண்டுகள் வைத்திருக்கும் அரசுகளையும் இந்திய ஒருமைப்பாட்டுக்கு எதிரான மனிதர்களையும் ஆத்ம சக்தியால் கட்டுப்படுத்த முடியும்.'' இலங்கையில் தமிழர்களுக்குச் சமஉரிமை கொடுக்கும்படி செய்யவும் எல்லா மக்களும் சைவர்களாயிருந்து பிற உயிர்கள் மீது அன்பாயிருப்பதற்கும் தம்முடைய ஆத்ம சக்தியால் மக்களுக்குச் சேவை செய்யலாமென்று அவர் அறிவித்துக்கொள்கிறார்.

---

* முகவரி: 6, லெப்போலியர் தெரு, சுரக்கால்பட்டு, கடலூர், என்.டி. 607001.

# ஏட்டளவில் நின்றுவிட்ட குறள்நெறி

[பேராசிரியர் மு. ரா. பெருமாள் முதலியார்]

திருக்குறள் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறட்பாக்களைக் கொண்டது. குறட்பா வெண்பா இலக்கணம் பெற்றது. வெண்பா இலக்கணம் கடுமையானது. அதில் தேர்ச்சி பெற்றோரும் பாட்டை எழுதும்போது மிகுந்த இடர்ப்படுவர் என்பது இன்றைய நிலை. வெண்பாவைச் சொன்னயம், பொருணயம், கற்பனை நயம், அணி நயம் முதலிய அழகுகளோடு எழுதுவது எளிதன்று. அஃதோர் அருஞ்செயல். ஒரு சிலரே அதில் தலைமை பெற்றோர்.

குறட்பாவில் மேற்சொன்ன அழகுகளைப் புகுத்தி எழுதுவது மிகவும் அரிய செயல். வெண்பாவென்றால், பொதுவாக நான்கு அடிகளும் பதினைந்து சீர்களும் இருக்கும். குறள் வெண்பாவிலோ இரண்டே அடிகள், ஏழே சீர்கள். இந்தச் சிறிய பாவில் மேலே சொன்ன செய்யுள் அழகுகளைப் புகுத்துவது அரிதினும் அரிது.

குறட்பாவின் இலக்கணத்தை அறிந்தோர் முயன்றால் அதனை எழுதிவிடலாம். நான் புதுவையில் பொதுக்கல்வி இயக்குநனாய் இருந்தபோது, ஒரு திங்கள் என் வீட்டில் நான் தனியாய் இருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. வழக்கம்போலக் காலைக் கடன்களை முடிப்பதற்கும் நீராடுவதற்கும் நான் வீட்டின் பின்பகுதியில் இருக்கும் போது, என்னைக் காண்பதற்காக யாரேனும் சிலர் வருவதுண்டு. என் வேலையாள் காலைச் சிற்றுண்டியை வாங்கிக்கொண்டு என் வீட்டிற்கு வரும்போது 8 மணிக்குமேல் ஆகிவிடும். பார்க்க வந்தவர்கள் அழைப்பு மணியை அழுத்துவார்கள். குளியலறையிலோ பின்வீட்டிலோ இருக்கும் நான் எப்படி உடனே வந்து கதவைத் திறக்க முடியும்? ஆனால், வந்தவர்களுக்கும் பொறுமை இருக்காது. அழைப்பு மணியை அடித்துக்கொண்டே இருப்பார்கள். அந்தத் தொல்லையைத் தவிர்ப்பதற்காக நான் முன் கதவின் அருகில் ஒரு நாற்காலியைப் போட்டு, அதற்குமேல் சுவரில் ஒரு பலகையை மாட்டி அதில்,

“ஒருக்கால் மணியை ஒலிக்க அதன்பின்
இருக்க இருக்கையில் இங்கு”

என்று குறட்பா ஒன்றை எழுதி வைத்துவிட்டேன். ஆனால் நான் எழுதிய குறளைத் திருவள்ளுவர் எழுதிய யாதேனும் ஒரு குறளோடு ஒப்பிட்டுப் பாருங்கள். எடுத்துக்காட்டாக,

"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து"

என்னும் குறட்பாவையோ,

"முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதொன் றுண்டு"

என்னும் குறட்பாவையோ பாருங்கள். இந்தக் குறட்பாக்களின் சொற் சிறப்பும், பொருட் சிறப்பும், கற்பனைச் சிறப்பும், உவமைச் சிறப்பும் திருவள்ளுவர் ஒருவரன்றி மற்றையோர் குறட்பா எழுதத் தகுதியற்றோர் என்பதைக் காட்டவில்லையா? பிற்காலத்தில் புலவர் சிலர் தமது நூல்களைக் குறட்பாவில் எழுதினர். ஆனால், அறி ஞர்கள் அவற்றை மதிக்கவில்லை. குறள் என்றாலே திருவள்ளுவர் எழுதிய அறநூலைத்தான் குறிக்கும். தாம் சொல்ல நினைத்த அருங் கருத்துகளைச் சொல்வதற்கு அவர் தெரிந்தெடுத்த அரிய கருவி குறட்பாவே. அதனாற்றான் ஔவையார்,

"அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகுத்திக்
குறுகத் தறித்த குறள்"

என்று வியந்து போற்றினார்.

திருவள்ளுவர் தமிழர்; திருமயிலையில் வாழ்ந்தார்; வாசுகி என்னும் அம்மையாரை வாழ்க்கைத் துணையாய் வரித்துக்கொண்டு இல்லறம் என்னும் நல்லறத்தை நடாத்தினார்; யாருக்கும் எதற்கும் தீங்கு தாராத நெசவுத் தொழிலை மேற்கொண்டு வாழ்வதற்கு வேண்டிய வருவாயைத் தேடிக்கொண்டார். இவ்வாறு மரபுவழி வரலாறு கூறுகிறது. அதனை ஏற்றுக்கொள்வதில் நமக்குத் தடை இருக்கமுடியாது.

ஆனால், அவர் வாழ்ந்த காலத்தைப்பற்றிக் கருத்து வேறுபாடு இருக்கத்தான் செய்கிறது. அவர் கி. மு. 50 முதல் கி. பி. 50 வரை வாழ்ந்தார் என்று பொதுவாகத் தமிழறிஞர்கள் கருதுகிறார்கள். ஆனால், வள்ளுவர் சங்க காலத்திற்கும் பின்னர் வாழ்ந்தவர் என்று வேறு சிலர் கருதுகின்றனர். தமிழறிஞர்கள், பொதுவாகத் தமிழின் தொன்மையை மிகைப்படுத்திக் கூறுவதில் மிகுந்த விருப்பம் உடையவர்கள். திருவள்ளுவர் காலத்தை இரண்டாயிரமாண்டுக்கு முன் தள்ளுவதால் வள்ளுவரின் பெருமை உயரும் என்பது அவர் களது கருத்துப் போலும்! ஷேக்ஸ்பியர் நானூறே ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தவர் என்பதால் அவருடைய சிறப்புக் குறைந்தா போயிற்று? அவரைப் போன்றவொரு நாடகாசிரியர் உலகில் இன்னும் தோன்றவில்லை என்பதுதானே அறிஞர் கருத்து?

வள்ளுவருடைய செய்யுள் நடையையும் கருத்துகளையும் காணும் போது, அவர் சங்க காலத்திற்குப் பின்னரே வாழ்ந்திருக்க வேண்டு மென்பது தெளிவு. எவ்வளவுதான் முயன்றாலும் அவர் இரண்டாயிர மாண்டுகளுக்கு, முன் வாழ்ந்தவர் என்று சொல்லலாமேயன்றி அதற்கு முன்னர் வாழ்ந்தார் என்று சொல்ல இயலாது. அப்படியும் சாணக்கியர் அதற்கு முந்நூறாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்து தமது அர்த்த சாஸ்திரத்தை எழுதிவிட்டார். அன்றியும், கி. மு. முந் நூறுக்கு முன்னர் அரிஸ்டாட்டில் வாழ்ந்தார் என்பதையோ, அவருக்கு முன்னர்ப் பிளேட்டோவும், அவருக்கும் முன்னர் சாக்ரட்டீசும் வாழ்ந்தனர் என்பதையோ யாரும் மறுத்தல் இயலாது. அதுபோலவே, கி. மு. அறுநூறுக்கு முன்னரே சீனாவில் கன்ஃபூஷியஸ் என்னும் பேரறிஞர் வாழ்ந்தார் என்பதும் உண்மையே. எப்படிப் பார்த்தாலும், உலகப் பேரறிஞர் பலர் வள்ளுவருக்கு முன்னர் வாழ்ந் தோர் என்பது தெளிவு. அவர்களுக்குப் பின்னர் வந்தவர் என்ப தால் வள்ளுவர் பெருமை ஒரு சிறிதும் குறையவில்லை.

மத்தியதரைக் கடல் நாடுகளுடனும் சீனாவுடனும் தமிழ்நாடு வாணிகம் செய்து வந்தது என்பதற்குப் போதுமான சான்றுகள் இருக்கின்றன. வாணிகர்களோடு கற்றறிந்த பெரியோர் சிலர் மட்டுமன்றி, அரிஸ்டாட்டில் போன்றோர் கருத்துகளும் வாணிகப் பொருள்களோடு வந்திருக்கலாமல்லவா ? அந்தக் கருத்துகள் பேரறிஞரான திருவள்ளுவர் காதில் விழாமலா இருந்திருக்கும்? அன்றியும், தவமறைந்தொழுகல் போன்ற அதிகாரங்களைக் காணும் போது, வள்ளுவர் காலத்தில் துறவிகள் ஏராளமாய் இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு. அவர்கள் பெரும்பாலும் பௌத்த சமண சமயங்களைச் சேர்ந்தவர்களாயிருந்ததும் தெளிவு. மேலும், சங்ககாலம் கி. பி. நான்காம் நூற்றாண்டின் தொடக்கத்திற்குள் முடிந்துவிட்டது என்பது வரலாற்றறிஞர் கருத்து. அதன்பின் நான்காம், ஐந்தாம், ஆறும் நூற்றாண்டுகள் ''இருண்ட காலம்'' என்னும் காலத்தைச் சேர்ந்தவை. அப்போது மூவேந்தர் ஆட்சி இல்லை. சங்க காலத்தில் மக்களிடையில் ஓங்கியிருந்த பார்ப்பன ஆதிக்கமும் அழிந்துவிட்டது. தமிழகத்திற்கு வெளியிலிருந்து வந்த களப்பிரர் ஆட்சி தமிழகத்தில் ஓங்கியிருந்தது. சமண பௌத்த சமயங்களும் அப்போது தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தன. அந்தக் காலத்தில்தான் வள்ளுவர் வாழ்ந்திருக்கவேண்டும். அதற்கு முன் ஓங்கியிருந்த பார்ப்பன மதத்தின் கோட்பாடுகளையும் அப்போ தோங்கியிருந்த சமண பௌத்தங்களின் கோட்பாடுகளையும் வள்ளுவர் நன்கு சிந்தித்துப் பார்த்திருக்க வேண்டும். அதுபோலவே, கிறித்துவ மதக் கருத்துகளையும் வள்ளுவர் அறிந்திருக்க வேண்டும். அன்றியும், சங்ககாலச் சமுதாய அமைப்பின் குறைகளையும் வள்ளுவர் சிந்தித்துப்

பார்த்திருப்பார். ஆக, சமய, சமுதாய, பொருளாதார, அரசியல் அமைப்புகளைப்பற்றி நன்கு சிந்தித்துப் பார்த்த வள்ளுவர், அவற்றில் தாம் கண்ட குறைகளை நீக்கிப் புதியதொரு சமுதாயத்தை உருவாக்க விரும்பித் தமது திருக்குறளை எழுதினர்.

சங்ககாலத் தமிழகத்தில் வடநூலார் கோட்பாடுகளும் சமுதாய அமைப்பும் செல்வாக்குப் பெற்றிருந்தன என்பதை நாம் அறிவோம். வள்ளுவர் அந்தக் கோட்பாடுகளையும் அமைப்பையும் ஏற்றுக் கொண்டார் என்று நாம் சொல்லமுடியாது. ஒரு சில புராணக் கதைகளை அவர் எடுத்துக்காட்டுகளாய்ப் பயன்படுத்தியுள்ளார். ஆனல், கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் அவர் நமக்குக் காட்டு கின்ற கடவுள் அனைவர்க்கும் பொதுவான கடவுள். அந்தக் கடவுட் கொள்கை சமணத்தையோ, பௌத்தத்தையோ, சைவ வைணவ சமயங்களையோ சேர்ந்ததன்று.

வள்ளுவர் நன்ருய் எண்ணிப் பார்த்தபின் மக்கள் அனைவர்க்கும் பயன்தரக்கூடிய பொதுவான அறநூல் ஒன்றை எழுதவே விரும்பினர் என்பது வெள்ளிடைமலை. அதனல்தான் அவர் தமிழரா யிருந்தும், தமிழ்நாட்டையோ, தமிழ்மொழியையோ, தமிழ்நாட்டில் புகழோடு விளங்கிய மூவேந்தர்களையோ, பிற புரவலர்களையோ பற்றி ஒரு குறளைக்கூட எழுதவில்லை. அவர் நாடு, வேந்தன், மொழி, மக்கள் என்று பொதுவாகவே பேசுகிருர். அதனல்தான் உலகுக் கெல்லாம் வழிகாட்டும் பொதுப் புலவர் என்று அவரை நாம் பாராட்டுகிருேம்.

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ் நாடு"

என்கிருர் பாரதியார்.

இனி, வள்ளுவர் தனிமனிதன் எத்தகைய குணங்களை உடை யவனய் இருக்கவேண்டும். சமுதாய—பொருளாதார—அரசியல் அமைப்பு எத்தகையதாய் இருக்கவேண்டும் என்பதைப்பற்றிப் பிறர் கற்பனைசெய்து பார்க்கவும் முடியாத உயர்நிலைக்குப் போய் நின்று கொண்டு தம்முடைய குறட்பாக்களை எழுதியுள்ளார். அவர் வாழ்ந்த காலத்தில் இருந்த சமுதாய—பொருளாதார—அரசியல் அமைப்பை அவர் அப்படியே ஏற்றுக்கொள்ளவில்லை. புதியதொரு சமுதாயத்தை உருவாக்க விரும்பி, அதற்காகத் தமது திருக்குறளை எழுதினர்.

இந்தக் கருத்தை மெய்ப்பிப்பதற்குத் திருக்குறளில் பல சான்றுகள் உள. எடுத்துக்காட்டாக, பிறப்பினல் உயர்வு தாழ்வு கற்பிப்பதை அவர் நாகரிகமற்ற செயலாய்க் கருதினர். ''பிறப் பொக்கும் எல்லா வுயிர்க்கும்'' என்று எழுதினர். ஆனல், அவ்

வாறு பிறந்தோருள் சிலர் உயர்ந்து நிற்பதற்கு அவர்கள் மேற்கொண்ட தொழிலே காரணம் என்று ஆணித்தரமாய் எடுத்துரைக்கிருர். ஒரு தொழில் அதனைச் செய்பவனுக்கு மட்டுமன்றிச் சமுதாயத்திற்கும் உயர்வு தரவேண்டும். பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் என்னும் கருத்து வடநூலார் போற்றுகின்ற வருணுசிரம தர்மத்திற்கு நேர் முரணுனது. வடநூலார் மட்டுமன்றி, அவர்களது பிரசாரத்தின் விளைவாக உலக அறிஞரும் போற்றுகின்ற பகவத் கீதையின் கருத்தையே வள்ளுவர் ஒரே அடியில் அடித்து வீழ்த்தி விடுகிருர். கீதை வருணுசிரம தர்மத்தை ஏற்றுக்கொள்கிறது. பார்த்தன் சத்திரியன் என்ற முறையில் தன் கடமையைச் செய்யவேண்டுமென்று கண்ணன் உபதேசம் செய்கிருனேயன்றி, மனிதன் என்ற முறையில் தன் கடமையைச் செய்யவேண்டும் என்று உபதேசம் செய்யவில்லை. அன்றியும், வடநூலார் விரும்பிப் போற்றிக் கடைப்பிடித்த மனுதர்ம சாஸ்திரத்தைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. மனிதனை மனிதன் இழிவுபடுத்துகிற நிலை இந்நூலிற் கூறப்பட்டுள்ள அளவிற்கு வேறெந்த நூலிலும் காண முடியாது. ஆப்பிரிக்க நீக்ரோவர்களை வெள்ளையர் அடிமைப் படுத்திய போதும் அந்த நிலைக்குச் சமய ஆதரவில்லை. ஆனால், ''பாரத புண்ணிய பூமியில்'' மட்டும் சமயமே பிறப்பில் உயர்வு தாழ்வைக் கற்பிக்கும் கருவியாகிவிட்டது. மனிதத்தன்மை சிறிதும் இல்லாத இந்த நிலையை ஏற்றுக்கொள்ள வள்ளுவர் மறுத்து விட்டார். அவர் சாதியைக் காட்டினும் தொழிலின் சிறப்பிற்கும் ஒழுக்கத்தின் உயர்வுக்கும் மதிப்புக் கொடுத்தார். ''ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்'' என்ருர்.

''மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்''

என்னும்போது வள்ளுவர் கல்வியைக் காட்டிலும் ஒழுக்கமே சிறந்தது என்னும் கருத்தையும் வற்புறுத்துகிருர்.

மேலும், பார்ப்பன மதத்தில் வேள்வி செய்தல் என்பது ஒரு சிறந்த அறச்செயலாகும். ஆனுல், வள்ளுவர் அதனை அறவே வெறுத்தார்.

''அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணுமை நன்று''

என்று உயிரன்பையும் கொல்லாமையையும் உயர்த்திப் பேசுகிருர்.

அன்றியும், வினைத்தூய்மை என்னும் அதிகாரத்தில் வள்ளுவர்,

''ஈன்ருள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்ருேர் பழிக்கும் வினை''

என்கிறார். இந்தக் குறள் எழுதப்பட்டுள்ள முறையே நமது மனத்தைப் பெரிதும் கவர்கிறது. ''ஈன்றாள் பசி'' என்று குறள் தொடங்குகிறது. தன்னைப் பத்து மாதம் சுமந்து பெற்று, பாலூட்டித் தாலாட்டிச் சீராட்டி வளர்த்து, தன் நலனுக்காக உயிரையும் கொடுக்கத் தயங்காத தன் தாய் பசியோடிருக்கிறாள், இன்னும் சிறிதுநேரம் உண்ணாமலிருந்தால் பசியால் துடித்து இறந்துபடுவாள் என்னும் நிலையில், ஒருவன் அவள் பசியை ஆற்றி உயிரைக் காப்பதற்கும் சான்றோர் பழிக்கும் வினை எதனையும் செய்தல் கூடாது. தாயின் உயிரைக் காக்க விரும்புவது உயர்ந்த நோக்கமே. ஆனால், அதற்காகவும் தீயசெயல் எதனையும் செய்தல் கூடாது. The end does not justify the means. இதே கொள்கையைக் காந்தியாரும் பின்பற்றினார் என்பதை அனைவரும் அறிவர். ''இறந்த மூப்பினராய இருமுதுகுரவரும் கற்புடைய மனைவியும் குழவியும் பசியால் வருந்தும் எல்லைக்கண், தீயவை பலவும் செய்தாயினும் புறந்தருக என்னும் அறநூற் பொது விதி''யினைப் பின்பற்றக் கூடாது என்று பரிமேலழகர் தமது விளக்கவுரையிற் கூறியுள்ளார். அவர் சொல்கின்ற அறநூல் வடநூலார் போற்றுகின்ற அறநூல். அந்நூற் கருத்தை வள்ளுவர் ஏற்க மறுக்கிறார். இது திருக்குறளின் சிறப்பிற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும்.

''இன்றி யமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல்''

என்னும் குறள் உயிர் வாழ்தற்கு மிக இன்றியமையாச் சிறப்புடைய செயல்களாய் இருப்பினும், மானம் குன்றும்படி வரும் செயல்களைக் கைவிடுக என்று அறிவுறுத்துகிறது. அதற்கு விளக்கவுரை எழுதிய பரிமேலழகர், ''இறப்ப வருவழி இளிவந்த செய்தாயினும் உய்க என்னும் வடநூல் முறையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி, அவை செய்யற்க என்பதாம்'' என்று எழுதியுள்ளார். ஆக, தாம் வாழ்ந்த காலத்துச் சமுதாய அமைப்பையும், அப்போது நிலவிய கருத்துகளையும் ஆராய்ந்து, அவற்றுள் பலவற்றைத் தள்ளிவிட்டு, உயர்ந்த குறிக்கோள்களையே தனிமனிதனும் சமுதாயமும் பின்பற்ற வேண்டுமென்று விரும்பியவர் வள்ளுவர். அதனாற்றான்,

''வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்திற் கொருநீதி''

என்று பேராசிரியர் சுந்தரம்பிள்ளை பெருமிதமடைகிறார்.

வள்ளுவர் தமது கருத்துகளை எடுத்துரைக்கிற முறை அவருடைய உயர்வைத் தெளிவாய்க் காட்டுகிறது.

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

என்று கூறும்போது, அவர் கூற்றை எதிர்த்துப் பேச யாருக்கும் துணிவில்லை என்பதையும், தாம் சொல்வதே உண்மை என்பதையும் உணர்ந்தே வள்ளுவர் பேசுகிறார். அவருடைய கல்வியறிவு, சிந்தனை யாற்றல், மனத்தெளிவு முதலியவற்றில் அவருக்கு எவ்வித ஐயமும் இல்லை. தாம் சொல்வதைப் பின்பற்றுவதுதான் மக்கள் நல்வாழ்விற்கு ஒரே வழி என்பதை அவர் உறுதியாக நம்பினார் என்பதற்கு மேலே சொன்ன குறள் ஓர் எடுத்துக்காட்டாகும்.

இனி,

"இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்"

என்னும் குறள் திருக்குறளைப் படிப்போர் அனைவருடைய கவனத்தையும் ஈர்க்கும் தன்மை உடையது. ஒழுக்கம் உடைய உயர்ந்தோர் வாய்மொழி வழுக்குதல் உடைய தரையிலே நடக்க உதவும் ஊன்றுகோல் போன்றதாம் என்பது இக் குறளின் பொருளாகும். மக்கள் வாழ்க்கை மேடு பள்ளங்கள் பலவற்றை உடையது. எது சரி, எது தவறு என்று துணிய முடியாத நிலை அவ்வப்போது மனித வாழ்க்கையில் ஏற்பட்டுக் கொண்டே எழுகின்றது. அப்போதெல்லாம் "இதுதான் சரி, அது தவறு" என்று நமக்கு உணர்த்தி வழி நடத்துவதற்கு ஒரு துணை வேண்டும். அந்தத் துணை திருக்குறளை யன்றி வேறொன்றும் இருக்க முடியாது. திருவள்ளுவர் ஒழுக்க முடையவர்களுள் தலைசிறந்தவர். அவர் கூறும் அறவுரை நமக்கு நன்மையன்றித் தீமை தாராது. ஆகவே, வழுக்குந்தரையில் நடப்போர் ஊன்றுகோலைத் துணைக் கோடல்போல, வாழ்வில் நாம் எதிர்ப்படுகின்ற நெருக்கடி நிலை சிறிதாயினும் பெரிதாயினும் திருக்குறளையே வழிகாட்டியாக வைத்துக்கொண்டு சமாளிக்கலாம்.

இவ்வாறு உலகத்திற்கெல்லாம் வழிகாட்ட வேண்டும் என்று கருதிய வள்ளுவரின் அறநெறி தமிழ்நாட்டுப் பொதுமக்கள் வாழ்க்கையை எவ்வளவிற்கு மேம்படுத்தியது என்னும் கேள்வி எழுவது இயல்பன்றோ? குறள் நெறி தமிழகப் பொது மக்களின் வாழ்க்கையைத் தொடவேயில்லை என்னும் உண்மை நமக்கு எவ்வளவு துன்பத்தைத் தருகிறது! இந்தத் தோல்விக்குரிய காரணங்களை அடுத்து ஆராய்வோம்.

(தொடரும்)

---

# "தமிழின் நீர்மை"

[திரு. ந. ரா. முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல்.]

"தமிழின் நீர்மை பேசித், தாளம் வீணை பண்ணி, நல்ல
முழவம் மொந்தை மல்கு பாடல், செய்கை இடம் ஓவார்;
குமிழின் மேனி தந்து, கோல நீர்மையது கொண்டார்;
கமழும் சோலைக் கானூர் மேய பவள வண்ணரே!"

—சம்பந்தர்

முன்னுரை :

இந்நிலவுலகின்கண் உள்ள பற்பல நாடுகளிலும், எத்துணையோ பல நூற்றுக்கணக்கான மொழிகள் வழங்கி வருகின்றன. சிறுசிறு கிளைமொழிகளைத் தவிர்த்து, உலகில் இதுபோழ்து வழங்கிவரும் மொழிகள் ஏறத்தாழ 2796 என்று, மொழி நூற்றுறை யறிஞர்கள் ஒருவாறு கணக்கெடுத்திருக்கின்றனர்.[1]

அவைகள் அனைத்தும் ஒரே தரத்தன அல்ல. தத்தமக்கு அமைந்த இயல்புகளுக்கு ஏற்ப அவைகள் வெவ்வேறு படிநிலைகளை யுடையன. அவற்றுள் மிகப் பெரும்பாலானவை 'திருந்தா மொழிகள்' என்னும் வகையைச் சேர்ந்தனவாகலாம். 'திருந்திய மொழிகள்' எனக் குறிப்பிடத் தகுந்த சிறப்புடைய மொழிகள் ஒரு சிலவேயாதல் கூடும். அவற்றுள்ளும், இலக்கண இலக்கிய நலங்களிற் சிறந்து, பழமையும் பெருமையும் வாய்ந்தவை, மிகச் சிலவேயாக இருக்கும். அவைதம்முள்ளும் ஒருசிலவே "உயர்தனிச் செம்மொழிகள்" எனப் புகழ்ந்து போற்றத்தக்கனவாகத் திகழ்கின்றன.

அவ்வொரு சில உயர்தனிச் செம்மொழிகளிலும்கூட, எத்தனையோ பல மொழிகள் வழக்கிழந்து நிற்க, அமிழ்தினும் இனிய நமது அருமைத் தமிழ்மொழியொன்றே, பல்லாயிரம் ஆண்டுகளாக உலக வழக்கு, நூல்வழக்கு என்னும் இருதிற வழக்கினும் தொன்று தொட்டு இன்றுகாறும் நின்று நிலவி, இளமையாற்றலோடு வளங்குன்றாது, இனிது வழங்கி வளர்ந்து வருகின்றது.

---

(1) "Gray's Foundations of Language tentitively places the total number of present day spoken languages, exclusive of minor dialects, at 2796..."

—Mario Pei, The World's Chief Languages, p. 15.

இற்றைஞான்று உலகம் முழுவதிலும் பேசப்பட்டு வரும் பெருமொழியாகப் பிறங்கும் ஆங்கில மொழியானது, இருநூறு-மூந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் மிக எளிய நிலையிலேயே இருந்து வந்தது.[2] ஒரு சிறு தீவின் மக்கட் கூட்டத்தினரால் மட்டும் பேசப்பெற்று வந்த அம் மொழியானது, உலகெங்கணும் வழங்கத்தகும் பெருமொழியாகி விடும் என்று, அந்நாளில் எவரும் கனவுகூடக் கண்டதில்லை! இங்ஙனமே, நம் இந்திய நாட்டிலும் ஒரு சில மொழிகள் மிக அண்மைக்காலத்தில் தோன்றியனவேயாகும். சௌராட்டிர மக்களின் மொழிக்குச் சென்ற நூற்றாண்டில்தான் (கி. பி. 1870) எழுத்துகள் தோற்றுவிக்கப்பட்டன என்பர். இன்னோரன்ன செய்திகள் பலவும் கருதியுணருங்கால், தமிழ்மொழியின் தனிப் பெருஞ் சிறப்பியல்புகள் பலவும் நம்மனோர்க்கு விளங்கும்.

தமிழ் இலக்கணம்

இங்ஙனம் தமிழுக்கே தனிச் சிறப்பாக உரிய பலவகைப் பெருமைகளுள், அதன் சீரிய இலக்கண அமைப்பு ஒன்றாகும். அது பற்றியே,

"கண்ணு தற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தஇப் பசுந்தமிழ், ஏனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்புஇலா மொழிபோல்
எண்ணி டப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ?"

என ஆசிரியர் பரஞ்சோதி முனிவர், அதன் சீரிய இலக்கண அமைப்புத் திறம் குறித்துப் பாராட்டியுரைப்பாராயினர்!

"தமிழ்மக்களைப்போல இலக்கணத்தினை அன்பும் ஆர்வமும் கொண்டு, திட்ப நுட்பம் செறிய மிகவும் நுணுகிக் கற்றுணர்ந்து இன்புற்றவர்கள் உலகிலேயே வேறு பிறர் இல்லை எனலாம். மொழியின் இலக்கண அமைப்புகளை, நுணுகி நுணுகி மிகவும் ஆராய்ந்து பயின்று வந்ததனால், தமிழர்களின் அறிவு மிகக் கூர்மையடைந்து வளர்ந்ததுடன், அவர்களுடைய மொழியும் திருத்தமுற்றுச் செம்மை எய்தித் திகழ்வதாயிற்று" எனப் பேரறிஞர் திரு. கால்டுவேல் அவர்கள் பாராட்டியுரைக்கின்றார்.

தமிழின் சிறப்பியல்புகள் :

உலகின்கண் உள்ள ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொருவகைச் சிறப்பியல்பு உண்டு. அவ்வகையிற் கருதின், எல்லா மொழிகளும்

---

(2) "Only two or three centuries ago, English was spoken by so few people that no one could dream of its ever becoming a world language'.

—Otto Jespersen, Growth and Structure of the English Language, p, 260

தம்முள் ஓராற்ருல் ஒத்த தன்மையுடையனவே என்பதில் ஐயமில்லை. ஆயினும், தமிழ்மொழியானது, தனக்கெனப் பல தனிப்பெருஞ் சிறப்பியல்புகளையுடையது எனக் குறிப்பிடுதல் இழுக்காகாது.

(1) தமிழில் உள்ள எழுத்துகளெல்லாம் மக்களுடைய நாவின் இயல்பையும், ஒலியின் இயல்பையும் ஆராய்ந்தறிந்து, இயற்கை நெறிக்கு ஏற்ப அமைக்கப்பட்டுள்ளன. தமிழில் வழங்கும் எந்தச் சொற்களின் முதலினும் ட் ண் ர் ல் ழ் ள் ற் ன் என்னும் எட்டெழுத்துகளும் நிற்கப் பெரு எனத் தமிலக்கண நூல்களில் ஒரு விதி காணப்படுதல், அவற்றை எளிதின் உச்சரிக்கமாட்டாத குழந்தைமைப் பருவநிலையில் மக்கள் இருந்த பழங்காலத்தில் தமிழ் தோன்றியது என்பதற்கு அறிகுறியாகும்,

''வையம் ஈன்றதொன் மக்கள் உளத்தினைக்
கையி னுல்உரை காலம் இரிந்திடப்
பைய நாவை அசைத்த பழத்தமிழ்
ஐயை தாள்தலைக் கொண்டு பணிகுவாம்''

—தமிழ்த்தாய் வாழ்த்து

(2) உரப்பல் கனைத்தல் முதலிய அரிய முயற்சிகள் இன்றி, எளிமையும், இனிமையும் அமையத் தமிழ் எழுத்துகளை இயல்பாக யாவரும் ஒலித்தல் இயலும்.

(3) தமிழ் எழுத்துகளின் ஒலியமைப்பியற்கை, தமிழ்மக்கள் வேறுபிற அயல்நாட்டு மொழிகளின் ஒலிகளையும் நன்கினிது திறம்பட எளிதாக ஒலிப்பதற்குத் துணைபுரியக்கூடியதாகத் திகழ்கின்றது.[3]

(4) ஆங்கிலம் முதலிய மொழிகளில் ஓரெழுத்தே பலவேறு ஒலிகளைக் குறிக்கப் பயன்படுவதுபோல் அன்றி, 'ஓரெழுத்துக்கு ஓரொலி' என்னும் அறிவுநெறிக் கொள்கைக்குப் பெரும்பாலும் முரண்படாமல் தமிழ் எழுத்துகள் அமைந்துள்ளன.[4]

(5) ஒருசில மொழிகள் தமக்கேயுரிய எழுத்தமைப்பினையுடையன அல்ல. எடுத்துக்காட்டாக, இட்டலியன் பிரெஞ்சு ஸ்பானிஷ் ஆங்கிலம் முதலிய மொழிகள் தமக்கெனத் தனித்தனியே எழுத்தமைப்புகளைப் பெருமல், ஒரேவகை நெடுங்கணக்கினையே (Alphabet) கையாளுகின்றன. தெலுங்கு எழுத்துகளையே கன்ன

(3) ''The rich variety of sounds of Tamil is such that its speakers can adopt themselves with comparative ease to the sounds of many foreign tongues''.

(4) 'One letter, one sound is the scientifically best phonetic rule.'

டமும் பயன்படுத்துகின்றது. தமிழ்மொழியோ, மிகப் பழங்காலந் தொட்டே தனக்கெனவுரிய ஒரு தனி எழுத்தமைப்பை உடையதாக விளங்கி வருகின்றது.

(6) ஆங்கிலத்தில் 'அச்செழுத்து வகை' 'கையெழுத்து வகை' என இருவேறு பிரிவுகள் உள்ளன. அரபிய மொழியில் மொழியின் முதலிடை கடைகளில் வரும் முறைகளுக்கேற்ப, மெய் யெழுத்துகள் நான்கு வேறு வடிவங்களைப் பெறுகின்றன. மேலும் ஒரு மொழியே அதனைப் பேசும் மக்களின் மதம் பண்பாடு முதலிய வேறுபாடுகள் காரணமாக வெவ்வேறு வகையான எழுத்துகளால் எழுதப்படுவதுண்டு. தமிழில் அத்தகைய நிலைகள் எதுவும் இல்லை.

(7) சில மொழிகளில் எழுதுவது ஒருவகையும், ஒலிப்பது பிறிதொருவகையுமாக உள்ளது. ஆங்கிலத்தில் Put, But-Depot-often முதலிய யாவரும் அறிந்த சொற்களே, இவ்வுண்மையை விளக்கப் போதிய சான்றாகும். ஜெர்மன் மொழியில் 'ரூட்டர்' Ruter '∴ப்ரூட்' Freud என எழுதிவிட்டு 'ராய்ட்டர்' Roiter '∴பிராய்ட்' Froid என ஒலிக்கின்றனர். இங்ஙனம் எழுதுவது ஒருவகையும் ஒலிப்பது பிறிதொரு வகையுமாக இருத்தலால், நேரும் இடர்ப்பாடு கட்கு எல்லையே இல்லை. அதற்கென ஒலிப்பியல் நூல்கள் வெளி யிடவேண்டிய இன்றியமையாமை ஆங்கிலம் முதலிய மொழிகளில் காணப்படுகின்றது. வல்லொலி மெல்லொலி மாற்றம் தவிர, இத்தகைய குறைபாடுகள் தமிழில் இல்லை எனத் துணிந்துகூறலாம்.[5]

(தொடரும்)

---

(5) "In the English tongue we speak
Why is 'break' not rhymed with 'freak'?
Well, you tell me why it is true.
We say 'sew' but likewise 'Jew'?
'Beard' sounds not the same as 'heard'
'Cord' is different from 'word'
And since 'pay' is rhymed with 'say'
Why not 'paid' with 'said' I pray?
'Cow' is 'Cow', but 'low' is 'low'
'Shoe' is never rhymed with 'foe'
And in short, it seems to me
Sound and letters disagree...

*—Lord Crower*

"The English spelling is an international disaster"

*—G. B. Shaw*

# செய்திகள்

## முனைவர் சொ. சிங்காரவேலனார்க்குத் 'திருமுறை உரைமணி' பட்டம்

செந்தமிழ்ச் செல்வி ஆசிரியர் குழாத்துள் ஒருவரும், மயிலாடு துறை அ. வ. அ. கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும், ஆய்வு நெறி யாளருமான, செஞ்சொற் கொண்டல், தமிழாகரர், முனைவர் சொ. சிங்காரவேலன் அவர்கட்கு. 14—10—84இல் அவரது தருமையாதீன வெளியீடாகிய ஐந்தாம் திருமுறை உரைப் பணியினைப் பாராட்டி 'திருமுறை உரைமணி' என்னும் பட்டத்தினைக் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஆசாரிய சுவாமிகள் வழங்கிப் பொன்னாடை போர்த்தி வாழ்த்திச் சிறப்பித்தார். அத்துடன் உருத்திராக்கமணி மாலையொன்றனையும், ஒரு பவுனையும் தந்து திரு. சிங்காரவேலனாரின் திருமுறைப் பணிகள் தொடர வேண்டும் எனவும் வாழ்த்தி அருளினார். 'திருமுறை உரைமணி' பட்டம் பெற்ற திருவாளர்க்கு நமது வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## டாக்டர் பி. இராமமூர்த்தி அவர்களுக்குப் பாராட்டு

நரம்பு, மூளை நோய்களை நீக்குவதில் தனித்திறமை பெற்றவரும், உலகின் பல்வேறு நாடுகளால் அழைக்கப்பெற்று அங்கெல்லாம் தம் மருத்துவத் திறமையை நிலைநாட்டிவருபவருமான டாக்டர் பி. இராமமூர்த்தி அவர்களைப் பாராட்டு முகத்தான், குழித்தலை தமிழ் 'கா. சு.' நினைவு மன்றத்தார் அண்மையில் நடைபெற்ற 20ஆவது ஆண்டு இலக்கிய விழாவில் 'நம்காலத் தேரையார்' என்ற பட்டத்தை அன்னாருக்கு வழங்கிச் சிறப்பித்தனர்.

## சிறைச் சாலையில் "நல்லொழுக்க நல்லுரை"

25—11—84 ஞாயிறு மாலை, பாளையங்கோட்டை தெய்வத் தமிழ் மன்றத்தினர், பாளையங்கோட்டை நடுவண் சிறையில் "நல்லொழுக்க நல்லுரை" தொடர் சொற்பொழிவினைத் தொடங்கி வைத்தனர். இவ் விழாவிற்கு நெல்லை மாவட்ட வருவாய்த் துறை அதிகாரி உயர் திரு. அரங்க சீனிவாசன் அவர்கள் தலைமை தாங்கினார். காவல்துறைக் கண்காணிப்பாளர் உயர்திரு. வ. ந. சீனிவாசன் அவர்கள் 'நல்லுரை' யினைத் தொடங்கி வைத்தார்கள்.

## சுப்பிரதீபக் கவிராயர் தீந்தமிழ் மன்றம்

9—11—84 மாலை புதுவை, சுப்பிரதீபக் கவிராயர் மன்றத்தினர், புதுவை வேதாந்த மடத்தில் மறைந்த அன்னை இந்திராவுக்கு இரங்கல் கூட்டம் நடத்தினர். கவிதைச் செல்வர் கல்லாடன் தலைமையில் புதுவைச் செல்வம், இலக்கியன் சனார்த்தனன், சு. வேல் முருகன், சு. பழனிச்சாமி, வெற்றிச் செல்வி, முருகு முத்துக்குமரன்,

வேலாயுதம், ஆ. மு. தமிழ்வேந்தன், தேவி திருவளவன், மு. சாமி நாதன், அரிமதி இளம்பரிதி, அமுதன், மா. இராமலிங்கம், ராஜ் குமார், புதுவை இளங்குயில் ஆகிய பாவலர்கள் இரங்கற் பாமாலைகள் பாடினர்.

## மார்கழித் திருவாதிரைச் சொற்பொழிவு

## திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி

6—1—85 ஞாயிறு மாலை 4 மணியளவில், பல்லாவரம் மறைமலையடிகள் கலை மன்றத்தில் (84, சாவடித் தெரு) சண்டமாருதம், பிரசங்க இரத்தினகரம் திரு. ஆ. தி. ஆ. ஈசுவரனார் அவர்களால் திருவாதிரைச் சொற்பொழிவு நிகழ்த்தப்பெறும். அன்பர்கள் கேட்டின்புறுவார்களாக.

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(சிலம்பு ௩௬, கஉஎ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 | 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 | 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 | 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 | 00 |
| திருமுருக விசாக நம்பி அவர்கள் | 5 | 00 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் | 5 | 00 |
| கல்லை. தே. கண்ணன் அவர்கள் (ஆசிரியர் 'வள்ளுவர்வழி') | 5 | 00 |
| திரு. L. G. செல்வசாமி, இந்தியன் வங்கி, சென்னை | 5 | 00 |
| திரு. G. Naidu (Arasu) Ryland Estate, Capetown | 50 | 00 |

---

# மதிப்புரை

## சங்ககாலத் தமிழர் சமயம்

[ஆசிரியர்: நக்கீரன் வழியடிமை பி. மா. சோமசுந்தரனார், 4, லோகல் பண்டு சாலை, பிஞ்சி கிராமம், இராணிப்பேட்டை-632401, பக். 88, விலை: உரு. 4-50.]

தமிழர் சமயம் வைணவமே என்று வைணவப் பெரியார் ஒருவர் எழுதியதை மறுக்க எழுந்ததே 'சங்ககாலத் தமிழர் சமயம்' என்னும் இந் நூல். அப் பெரியாரின் செயல் 'சிறு பெண்கள் சிறு சோறட்டுண்டுண்டு தேக்கித் தம்மிலே களித்தலைக் கடுக்கும்' என்கிறார் இந் நூலாசிரியர்.

திருமாலவதாரங்கள் சீர்மை பயப்பனவல்ல என்பதை வைணவ நூல்களின் மேற்கோள்களைச் சான்று காட்டியே ஆசிரியர் மறுத்திருக்கிறார். (பக். 4+88) வைணவ சமயம் தமிழ்நாட்டில்

என்றுமே சைவத்திற்குப் பிற்பட்டே இருந்ததென்பதைப் பழந்தமிழ் இலக்கிய, சமய நூல்களைச் சான்று காட்டி விளக்குகிறார்.

மறைமலையடிகளாருக்குப் பின் தனித்தமிழில் சுவையாக எழுத முடியுமா? என்று ஐயுறுவோர்க்கு விடைபகரும் வகையில் எழுதப் பெற்ற சுவையான தமிழாய்வு நூல். நூலின் நடை இலக்கணச் செறிவு மிக்கது.

நுனிப்புல் மேயும் தமிழாய்வாளர்கள் பெருகிய சூழலில் ஆழமும் அகலமும் பார்க்கும் ஆய்வாளர் இன்னும் உளர் என்பதை நிறுவும் நூல் இதுவாகும்.

இரா. மு.

## பார்புகழும் பாவேந்தர்

[ஆசிரியர்: முல்லை முத்தையா, நியூசெஞ்சுரி புக் ஹவுசு பிரைவேட் லிமிடெட், 41-பி, சிட்கோ இண்டசுடிரியல் எசுடேட், சென்னை-600 098: மே, 1984; விலை: உரு. 8-25. பக்கங்கள் xii+96.]

இந் நூல் புரட்சிப் பாவலர் பாவேந்தர்பற்றி 21 அறிஞர்கள் பல்வேறு காலங்களில் எழுதிய, பேசிய கட்டுரைகளின் தொகுப்பு. நூலாசிரியர் பாவேந்தரின் அணுக்கத் தொண்டராகவும், அன்பிற் குரியவராகவும், அவரைப் பல்வேறு சூழ்நிலைகளில் அணைத்துச் செல்பவராகவும் இருந்திருக்கின்றார். நூலின் முற்பகுதியில் காணப் படும் 4 பக்க ஒளிப்படப் பதிப்புகளே முல்லை முத்தையாவின் உழைப் பிற்குப் பலனாக ஒளிருகின்றன. நூலின் அனைத்துக் கட்டுரைகளும் பயனுள்ளவை. குறிப்பாகப் பெரியார் ஈ. வே. ரா. நிகழ்த்திய சொற் பொழிவின் (8—3—73) பிழிவே முதற் கட்டுரை. இராம. அண்ணா மலை எழுதிய ‘பாவேந்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள்’ என்ற தலைப்பு பாவேந்தரின் வாழ்வு நிலையை வரிசைப்படுத்தி, தொடர்ச்சியாகத் தொகுத்துக் காட்டியுள்ளமை பயனுறு முயற்சி. இஃதோர் அரிய நூல் எனல் மிகையன்று. நூல் முழுமையும் பாவேந்தரின் உண்மை யான பண்பு நலங்கள் பரந்து காணப்படுகின்றன. ஆய்வர்களுக்கு அரிய பெட்டகம். பிறமொழிச் சொற்களையும், சில பிழைகளையும் நூலில் தவிர்த்திருக்கலாம்.

—நா. எழில்-மகிழ்நன்

## மாணிக்கவாசகரின் திருவெம்பாவை, திருப்பள்ளி யெழுச்சி—ஓர் ஆய்வு

[ஆசிரியர்: டாக்டர் ஆ. கந்தசாமி, எம். ஏ., எம். ஃபில்., பிஎச். டி., எழில் முருகன் பதிப்பகம், 2, மேட்டுத்தெரு, சென்னை-600 001, விலை: உரு. 20-00.]

மார்கழித் திங்கள் விடியற் காலையில் திருக்கோயில்களிலும், இறையன்பர் இல்லங்களிலும் மாணிக்கவாசகர் அருளிய திருவெம் பாவை, திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் பாடப்படுவதைக் கேட் கிறோம். காற்றினிலே மிதந்து வந்து செவிக்கின்பம் பயக்கும் இப் பக்திப் பாடல்களை, நாம் படிக்க நேரும்போது மணிவாசகப் பெரு மானின் உள்ளத்தோடு நம்முள்ளமெல்லாம் ஒன்றிவிடுகின்றன. அந்த அளவுக்குப் பக்திச் சுவை நனிசொட்டச் சொட்ட, பாடப்

பெற்றவை அப் பாடல்கள். இத் திருவெம்பாவையும், திருப்பள்ளி யெழுச்சியும் சைவப் பனுவல்களாகும். அதுமட்டுமன்றி இவற்றின் இலக்கிய நயம் பயில்தொறும் இன்பம் பயப்பன. இத்தகைய இலக்கிய இன்பத்தில் தோய்ந்த இந்த நூலாசிரியர் இதனை ஆயத் தொடங்கிப் பாவை இலக்கியத்தின் தோற்றம், திருப்பள்ளி எழுச்சி யின் தோற்றம், அவற்றின் வளர்ச்சி, இலக்கியச் சிறப்பு, பண்பாட்டுச் சிறப்பு, இவ்விலக்கியங்களில் அடங்கியிருக்கும் மெய்ப்பொருள் உண்மைகள் ஆகியவற்றைத் தமது நுண்மாண் நுழைபுலத்தால் கண்டறிந்து நிரல்படக் கூறுகிறார். தமது கூற்றுக்கு ஆதாரங் களாகத் தொல்காப்பியம், பிற்கால இலக்கிய ஆராய்ச்சி நூல்கள் ஆகியவற்றை எடுத்துக் காட்டுகிறார். இவை இவர் தம் நூலறிவினை விளக்குவனவாகும். தைந்நீராடல், பாவை நோன்பு, அம்பாவாடல் என்பனபற்றியும் இந் நூலிலிருந்து நன்கு தெரிந்துகொள்ளலாம். சுருங்கச் சொல்ல வேண்டுமானால் இந் நூல் நூலாராய்ச்சி செய் வோர்க்குப் பயன்படும் ஓர் ஆராய்ச்சி நூல் எனலாம். ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

## பாடுவோம் திராவிடப் பண்!

[ஆசிரியர்: டாக்டர் கா. காளிமுத்து. எம். ஏ , பிஎச். டி., தமிழக வேளாண்மைத் துறை அமைச்சர், சிந்தனையாளர் பதிப்பகம், சென்னை-28, கிடைக்குமிடம்: சை. சி. நூற்பதிப்புக் கழகம், 79, பிரகாசம் சாலை, சென்னை-108, விலை: உரு. 6-00.]

டாக்டர் காளிமுத்து அவர்கள் பேரறிஞர் அண்ணா அவர்களின் தம்பிமார்களுள் முதல் வரிசையில் வைத்து எண்ணப்பட வேண்டிய வர். நல்ல தமிழறிஞர்; நாடு மொழி—இனம் ஆகிய ஒப்பற்ற முப் பற்றுகளின் உறைவிடம். இப்படிப்பட்டவர் பாடியிருக்கும் திராவிடப் பண்தான் இந் நூல். அமைச்சரவர்கள் அவ்வப்போது இதழ்களில் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பே இது. 'தெற்கு விழிக்கிறது.'' என்னும் முதல் கட்டுரையே படிப்போரை விழிப்படையச் செய்கிறது. இக் கட்டுரைகள் பெரும்பாலும் 'நீரோட்டம்' இதழில் வெளி வந்தவை. அவற்றிலிருந்து 19 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. 10ஆவது கட்டுரையாகத் திகழும் ''திராவிடப் பண் பாடுவோம்!'' என்னும் கட்டுரை நூலாசிரியரின் மொழியாற்றலையும், வரலாற்று அறிவினையும் விளக்குவனவாகும். மற்றும் ''நச்சுப் பாம்பும் பச்சிலைக் கொடியும்'' ''படையே வந்தாலும் முடியாது'' ''சிற்றினம் சேராமல் பெரியாரைத் துணைக்கொள்'' ஆகிய கட்டுரைகள் படித்தறிய வேண்டியனவும், படிப்போரின் சிந்தனைக்கு வேலை தருவனவுமாகும். அங்ஙனமே ''ஈழத்தமிழர் வாழ்வது எந்நாள்?'' என்னும் இறுதிக் கட்டுரை அமைச்சர் அவர்களின் தமிழினப் பற்றுக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாகும். திராவிடப் பண்பாட விழைவோர்க்கு இந் நூல் நல்வழிகாட்டியுமாகும்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட்.

பதிவு எண் : 4899 December 1984





கருணைமாரி பொழியும் கருமாரியின் புகழ்பரப்பும்
திங்கள் ஏடு
தெய்வீகத் தமிழ் வளர்க்கும்
செந்தமிழ்த் திங்களேடு

# ஸ்ரீ தேவி கருமாரியம்மன் விஜயம்

(மாத இதழ்)

ஆசிரியர் :

திருவேற்காடு அருட்கவியரசு,
தவத்திரு. ஸ்ரீ தேவி கருமாரிதாச சுவாமிகள்

* பக்திச் சுவைமிகுந்த இலக்கியக் கட்டுரைகள்
* தெய்வத் தமிழை வளர்க்கும் ஆங்கிலக் கட்டுரைகள்
* ராசி மிகுந்த ராசிபலன்
* இன்னும் பற்பல அம்சங்கள் கொண்டது:

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 24 00 |
| ஆயுள் சந்தா | ரூ. | 251 00 |

விவரங்களுக்கு :

ஸ்ரீ தேவி கருமாரியம்மன் விஜயம்
சூப்பர் பவர் பப்ளிகேஷன்ஸ்
152. (முதல் மாடி) தம்புசெட்டித் தெரு,
சென்னை-600 001.
தொலைபேசி: 21595